சரசுவதி மகால் வெளியீட்டு எண். 9

# பெருந்தேவனார் பாரதம்

## (மாவிந்தம்)




சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்.

1993] [விலை ரூ. **20-00**

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீடு எண்—9.

# பெருந்தேவனார் பாரதம்

## ( மாவிந்தம் )

பொழிப்புரையுடன்

பதிப்பாசிரியர் :
உயர்திரு எஸ். முத்துரத்ன முதலியார் அவர்கள்
முன்னாள் தமிழ்ப் பண்டிதர்,
சரசுவதி மகால் நூலகம்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூலகம்,
தஞ்சாவூர்.

1993]                                        [ விலை ரூ. 20—00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு




| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | பெருந்தேவனார் பாரதம் (மாவிந்தம்) |
| பதிப்பாசிரியர் | : | திரு. எஸ். முத்துரத்ன முதலியார் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் |
| வெளியீட்டு எண் | : | 9 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | மூன்றாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | செப்டம்பர், 1993. |
| தாள் | : | 14. 2 கிலோ-சேஷசாயி |
| நூல் அளவு | : | 21 X 14 செ.மீ. |
| பக்கங்கள் | : | 171 |
| படிகள் | : | 1200 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலக அச்சகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | இலக்கியம் |
| விலை | : | ரூ. 20—00 |

# வெளியீட்டாளர் முகவுரை

"பெருந்தேவனார் பாரதத்"தின் பகுதியாகிய "மாவிந்தம்" என்னும் இந்நூல் இப்பொழுது மூன்றாம் பதிப்பாகச் சரசுவதி மகால் நூலகத்தால் வெளியிடப் படுகின்றது.

இந்நூல் முதற்பதிப்பாக 1950ஆம் ஆண்டிலும் இரண்டாம் பதிப்பாக 1967ஆம் ஆண்டிலும் வெளியிடப் பெற்றதாகும்.

இந்திய நாட்டின் தனிப்பெரும் இதிகாசங்களான இராமாயணமும், மகாபாரதமும் இந்திய மொழிகளிலும் பிறநாட்டுமொழிகளிலும் பற்பல மொழிபெயர்ப்புகள் பெற்றுப் பெருஞ்செல்வாக்குடன் திகழ்கின்றன.

வான்மீகி முனிவர் இயற்றிய இராமாயணத்தையும், வியாச முனிவர் இயற்றிய மகாபாரதத்தையும் முதல் நூல்களாகக் கொண்டு வழி நூல்களாக அரும்பெரும் காவியங்களை, ஒவ்வொரு மொழியிலும் புலவர் பெருமக்கள் இயற்றி உள்ளனர்.

பெருந்தேவனார் தொடங்கி, வில்லிபுத்தூரார் வரை பல புலவர் பெருமக்கள் தமிழில் பாரதக்கதையைக் காவியங்களாக இயற்றி அளித்துள்ளார்கள்.

நேரிசை வெண்பா யாப்பில் அமைந்து பாரதக் கதையைக் கூறுகின்ற இப்பெருந்தேவனார் பாரதம் (மாவிந்தம்) நூலின் பதிப்பாசிரியர் உயர்திரு பண்டித திரு. முத்துரத்தின முதலியார் அவர்கள் ஆவார்.

இந்நூலினை அச்சிட வழக்கம்போல் பொருளுதவி நல்கிய நடுவண் அரசுக்கு எனது நன்றியை உரித்தாக்கு கின்றேன். இந்நூல் சிறப்பாக வெளிவர உதவிய ஏனை யோர்க்கும் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

தமிழ் இலக்கிய உலகம் இந்நூலின் முற்பதிப்பு களுக்கு அளித்த வரவேற்பை இப்பதிப்பிற்கும் வழங்கும் என நம்புகிறேன்.

தஞ்சாவூர்,
*30—9—93*

**தி. சண்முக ராஜேஸ்வரன், இ. ஆ. ப.,**
**மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும்**
**இயக்குநர் (பொறுப்பு)**
**சரசுவதி மகால் நூலகம்.**



# இரண்டாம் பதிப்பின் முன்னுரை



தஞ்சை மாநகரின் புகழுக்கே ஒரு காரணமாய் விளங்கும் மன்னர் சரபோஜியின் ஸரஸ்வதி மகால் நூல் நிலையம் ஓர் வற்றாக் கடல், குன்றாத அறிவுக்கனி, மங்காக் கல்விச்சுடர், வாடாக் கவிமலர்ச்சோலை. கடலிற் கிடக்கும் முத்துக்கள் போலவும், சுனியில் புதைந்திருக்கும் பொன்னும் மணியும் போலவும், பகலவனது கதிர்கள் போலவும், சோலைதோறும் மணம் வீசித்திகழும் மலர்கள் போலவும், இங்குச் சேகரித்துப் பாதுகாத்து வைக்கப் பட்டிருக்கும் நூல்கள் எண்ணிறந்தன. அவற்றுள் வெளியானவை "கைமண்ணளவு", வெளியாகக் காத்திருப்பவை "உலகளவு" என்பது பொருந்தும். இந்நூல்களைச் சிறிது சிறிதாக வெளியிட்டு மக்களுக்குப் பயன்படுத்தும் பணியில் இந்நூல் நிலையம் ஈடுபட்டுள்ளது. இப் பணிக்கு வேண்டிய பொருளுதவி தந்து. மாநில அரசாங்கமும், மத்திய அரசாங்கமும், மக்களது நன்றியைத் தமக்குரித் தாக்கிக் கொள்ளுகின்றன.

இவ்வாறு வெளியிடப்பட்ட நூல்களில் ஒன்று பெருந் தேவனார் பாரதத்தின் பகுதியாகிய "மாவிந்தம்" என்னும் இந்நூல். பாரதநாட்டு இதிகாச நூல்களில் தலைசிறந்து விளங்குபவை, வான்மீகி முனிவர் இயற்றிய ராமாயணமும், வியாசமுனிவர் இயற்றிய மகாபாரதமுமாகும். இவை யிரண்டும் நம்நாட்டு மொழிகளில் மட்டுமன்றி, பிறநாட்டு மொழிகளிலும் பலகாலும் மொழிபெயர்க்கப்பட்டும், சுருக்கிக் கூறப்பட்டுமுள்ளன. இவற்றை முதல் நூலாகக் கொண்டு வழி நூலாக அரும்பெருங்காவியங்களை இயற்றி யுள்ள புலவர் பெருமக்கள் பலர். பெருந்தேவனார்

தொடங்கி வில்லிபுத்தூர் ஆழ்வார் ஈறாகப் பாரதம் பாடிய புலவர்களையும் அவர்களது கால வரலாற்றையும் பற்றிப் பதிப்பாசிரியரது புலமை வாய்ந்த முன்னுரையில் தெளியக் காணலாம்.

இந்நூல் ஸரஸ்வதி மகால் நூலகத்திலுள்ள M. 65/ D. 416 இலக்கமுள்ள சுவடியிலுள்ளது. இது முதன் முதலாக கி. பி. 1950-ஆம் ஆண்டு சென்னை மாநில அரசாங்கத்தாரின் பொருளுதவியையும், அக்காலம் நூலகத் தமிழ்ப் பண்டிதராய்ப் பணியாற்றிவந்த பண்டித ஸ்ரீ S. முத்துரத்தின முதலியாரின் புலமையுதவியையுங் கொண்டு வெளியிடப்பட்டது. இதுகாறும் இந்நூலைப் படித்து இனிய தமிழின் சுவை நுகர்ந்த மக்களைப்போன்று இனியும் பலரும் இன்புறுதல் வேண்டி இந்நூலின் இரண்டாவது பதிப்பை ஈண்டு தமிழன்னையின் திருவடிகளில் இட்டு, இது போன்ற பணியை ஆற்றும் வாய்ப்பை என்றும் அளிக்குமாறு வேண்டுகின்றோம்.

தஞ்சை,
1—3—'67.

(Sd) O. A. நாராயணஸ்வாமி,
கௌரவக் காரியதரிசி.

# PREFACE

The Saraswathi Mahal Library is the result of the fusion of three cultural influences, the Tamilian Cholas, the Telugu Nayaks and the Maharashtras, finally enriched by the impact of the West under Maharaja Serfoji. The manuscripts in the Library are in the respective languages of the rulers, namely, Tamil, Telugu and Marathi. But they all owed common allegiance to Sanskrit and this accounts for the Sanskrit collections in the Saraswathi Mahal which are the biggest in the whole of India. It is a remarkable lesson to us in tolerance that under the reign of the three different dynasties, no hostility was evinced by the successors to the language of the predecessors. On the other hand we find in our library remarkable instances of linguistic experiments like Tamil manuscripts in Telugu and Nagari script, Telugu manuscripts in Nagari script and Sanskrit manuscripts in Telugu script. Under each ruler, collections were made in many languages and subjects, until in the reign of Serfoji, the Great Maratha King, we find the Saraswathi Mahal well established as a great centre of research and learning.

Although the Sanskrit collections in the Library are by far the most voluminous, still there are a great number of manuscripts in each of the other three languages which are of surpassing value. The Tamil collections are among the most valuable of our literary treasures. Importance naturally centres round the Tamil Medical manuscripts because of their practical value. But the Tamil collections in other subjects especially in literature deserve special attention.

We have published in the following pages the contents of a rare manuscript first noticed in our Descriptive Catalogue by the well known Tamil Scholar, late Sri Olaganatha Pillai. It is described as PERUNDEVANAR BHARATAM. It consists of 339 stanzas in Tamil in the "VENBA" metre, (வெண்பா) dealing with the closing portion of MAHA BHARATHAM, where the Pandavas journey to Heaven after entrusting the kingdom to Parikshit.

It is clear from the work that the author is one PERUNDEVANAR. But is he the celebrated author of the "SANGAM AGE" or the later PERUNDEVANAR of the 9th century, who enjoyed the patronage of the Pallava King NANDI VARMAN? A fragment of the later author comprising the UDYOGA PARVAM, BHEESHMA PARVAM and DRONA PARVAM was published in 1925 by Pandit Sri A. Gopala Iyer. In his learned Introduction, the Pandit has given cogent reasons for concluding that the author of the fragment is different from the author of the "SANGAM AGE". We have made a comparitive study of the text published by him and the text we are now publishing and it is clear that the author of the present work is no other than the poet of the 9th century and that our work is the concluding part of the same work published by Pandit Sri A. Gopala Iyer.

Sri S. Muthuratna Mudaliar, the learned Pandit of our Library, has discussed this question in his introduction. He has referred to some of the stanzas in the previously published work and this work to prove the identity of the author.

A chief feature of this work is the commentary in prose under each stanza. It is not clear if the author of the comments is different from the poet.

It is not necessary for us to speak of the high quality of the verses or the sublimity of the thoughts enshrined in them. Even a superficial glance at the work throws up coruscating utterances which linger long in the mind. There is no doubt that all lovers of Tamil will welcome this publication.

We are grateful to the Government of Madras for the timely financial aid they have given us to bring to light the rare treasures of the Saraswathi Mahal.

Saraswathi Mahal,
Tanjore.
1—7—1950.

S. GOPALAN,
*Hony. Secretary.*

# முன்னுரை.

உ

ஸ்ரீ கண்ணபிரான் துணை.

**"உயர்வற உயர்நல முடையவன் எவனவன்**
**மயர்வற மதிநல மருளினன் எவனவன்**
**அயர்வறு மமரர்க ளதிபதி எவனவன்**
**துயரறு சுடரடி தொழுதெழென் மனனே."**

மாபாரதக் கதைகள் பண்டைக் காலத்தில் நந் தமிழ் நாட்டில் 'யாண்டும்' பரவியிருந்தன என்பது சங்க நூற்களால் நன்கு அறியக்கிடக்கின்றது.

தமிழ் மக்கள் அக்கதைகளில் பெரிதும் ஈடுபட்டு அவற்றை அறிந்து கொள்வதற்கு ஆர்வமுடையவர்களாகவிருத்தலை யுணர்ந்த பாண்டிய வேந்தன் ஒருவன் அவ்விதிகாசம் முழுவதையும் தமிழில் மொழிபெயர்க்க விரும்பினான்.

கடைச்சங்கப் புலவருள் ஒருவராகிய 'பெருந்தேவனார்' என்பார், அவ்வேந்தன் வேண்டுகோட்கிணங்கி அப்பெருநூலைப் பன்னீராயிரம் வெண்பாக்களில் பாடி முடித்தனர். இதனைக் கீழ்வரும் பாவினால் உணர்க.

**சீருறும் பாடல்பன் னீராயிரமுஞ் செழுந்தமிழ்க்கு**
**வீரர்தஞ் சங்கப் பலகையி லேற்றிய வித்தகனார்**
**பாரதம் பாடும் பெருந்தேவர் வாழும் பழம்பதிகாண்**
**மாருதம் பூவின் மணம்வீ சிடுந்தொண்டை மண்டலமே.**

அவ்வருஞ் செயல்பற்றி அப்புலவர்பெருமான் 'பாரதம்' பாடிய பெருந்தேவனார் என்று சங்கப் புலவர்களாலும், பாண்டிய வேந்தனாலும் பாராட்டி வழங்கப் பெற்றனர்.

கி.பி. 900 முதல் 920 வரையில் பாண்டிநாட்டில் ஆட்சி புரிந்த **'மூன்றாம் இராஜசிம்ம பாண்டியன்'** என்பான் **சின்னமனூர்ச் செப்பேடுகளில்**, கடல் கோளுக்குமுன் தன் முன்னோர்

காலத்தில் நிகழ்ந்த அரிய பெரிய செயல்களைக் குறிக்குமிடத்து (1) 'மாபாரதந் தமிழ்ப்படுத்தும்' (2) 'மதுராபுரிச் சங்கம் வைத்தும்' (3) 'தலையானங்கானத்துக் கிடைத்த வெற்றி' என்று வரைந்திருப்பது அறியத் தக்கது.

தமிழகத்தில் பல்லவர் ஆட்சிக் காலங்களில் ஊர்தோறும் மன்றங்களில் இரவில் மாபாரதம் படித்துப் பொருள் கூறப்பட்டு வந்தது என்பது, அவ்வேந்தர்களின் செப்பேடுகளாலும், கல்வெட்டுக்களாலும் அறியப்படுகிறது.

அங்ஙனம் படிக்கப்பெற்ற (South Indian Inscriptions Vol III No. 206) பாரதம் வடமொழியில் உள்ள நூலாக விருத்தல் வேண்டும் என்பது, உய்த்துணரப்படுகின்றது.

எனினும், அறிஞர்கள் அந்நூலைப் படித்துப் பொருள் கூறுவதைப் பொதுமக்கள் விரும்பிக் கேட்டுவந்தமை குறிப்பிடத் தக்கது.

அதுபற்றியே, அரசர்களும், பிற செல்வர்களும், ஊர்களில் பாரதம் படித்தற்கு 'நிவந்தங்கள்' அளித்துள்ளனர்; அன்றியும், அவர் இறையிலியாக வழங்கியுள்ள ஊர்களில் பாரதம் படிப்போர்களுக்குப் 'பங்குகளும்' அளித்திருப்பது உணரற்பாலதாம். பல்லவ வேந்தனாகிய 'முதல் பரமேச்சுரவர்மன' (கி.பி. 670—685) என்பான் கூரத்து மண்டபத்தில் பாரதம் வாசிப்பதற்கு ஒரு பங்கு நிலம் கொடுத்துள்ள செய்தி 'கூரஞ்செப்பேடுகளால். தெள்ளிதிற் புலப்படுகின்றது. (South Indian Inscription Vol. I pp. 144-146) நந்திவர்ம பல்லவமன்னனது (கி.பி. 710-775) தண்டந்தோட்டச் செப்பேடுகளில் 'பாரதம்' வாசிப்பவனுக்குப் பங்கு ஒன்றும், என்று கூறப்பட்டிருப்பதும் அறியற்பாலது. (S.I.I. Vol. II No. 99).

பாரதம் பொதுமக்களால் பெருவிருப்புடன் கேட்கப்பெற்று வருதலையுணர்ந்த 'தெள்ளாறு எறிந்த நந்திவர்மன்' என்ற பல்லவ அரசன் (கி.பி. 826—828) அதனைத் தமிழில் மொழி பெயர்க்குமாறு தன் அவைக்களப் புலவர்க்குக் கூறவே அப் புலவரும் அதனை 'உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக' இயற்றி அரசவையில் அரங்கேற்றினர். அப்

புலவர் பெருமான் வரலாறு தெரியாமற் போயினமை மிக வருந்தற்பாலது. அவர் அந்நூலைத் தெள்ளா றெறிந்த 'நந்தி' வர்மன் ஆட்சியில் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் இயற்றியிருத்தல் வேண்டுமென்பது.

> **'வண்மையால் கல்வியால் மாபலத்தால் ஆள்வினையால்**
> **உண்மையால் பாராள் உரிமையால்—திண்மையால்**
> **தேர்வேந்தர் வானேறத் தெள்ளாற்றில் வென்றானே**
> **டியார் வேந்தர் ஏற்பார் எதிர்''**

என்ற பாரத வெண்பாப் பாடல் ஒன்றால் நன்கு துணியப்படும்.

இனி, கி.பி. 1210 ஆம் ஆண்டில் 'மூன்றாங் குலோத் துங்க சோழன்' ஆட்சிக்காலத்தில் பாரதம் மற்றொரு முறை இனிய தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது என்று வட திருவாலங்காட்டுக் கல்வெட்டொன்றால் தெரிகிறது. (Inscription 482 of 1905) அப்பெருஞ் செயலைப் புரிந்தவர் தொண்டை மண்டலத்துக் குன்றவர்த்தனக் கோட்டத்து இல்லத்தூர் நாட்டு அரும்பாக்கமுடையான் **'அருணிலை விசாகன் திரைலோக்ய மல்லன் வத்சராசன்'** என்பவர். அவர் பாரதந்தன்னை **'அருந் தமிழ்ப் படுத்திச் சிவநெறி கண்டவர்'** என்று அக்கல்வெட்டில் கூறப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் வில்லிப்புத்தூராழ்வார் பாரதம் தோன்றியது.

இவ்வாறு, சங்க காலம் முதல் பாரத கதை பல பெரியார் களால் தமிழில் பாடப்பட்டிருப்பினும் தற்காலத்தில் வழங்கி வருவது கடைசியிற் செய்த நூலாகிய வில்லிபுத்தூராழ்வார் பாரதமேயாகும்.

இனி, மற்ற மொழிபெயர்ப்புகள் அநேகமாய் இறந்து பட்டன வெனினும், சிற்சில பகுதிகள் வெளியிடப்பெற்றிருக்கின்றன. அவற்றின் தொன்மையையும், சொல்நயத்தையும் உற்று நோக்குங்கால் அவைகளில் பெரும்பாகம் இறந்தமை குறித்து

பெருந்த வேண்டியிருக்கிறது. நமக்குக் கிடைத்திருக்கும் பிரதிகள் பின்வருமாறு:—

**(1)** தொல்காப்பிய உரையாசிரியர்களால் மேற்கோளாக எடுத்தாளப்பட்ட பாரதப் பாட்டுகள் என்றும், பெருந்தேவனார் பாடல்கள் என்றும் குறிக்கப்பட்ட பாடல்கள் வெண்பாவும் அகவலாயும் உள.

(2) தெள்ளா றெறிந்த **'நந்திவர்ம பல்லவன்'** புகழை முதற்படியாகவுடைய 'பெருந்தேவனார் பாரதத்தில்' உத்தியோக பருவம், வீடும பருவம், துரோண பருவம் இவற்றில் சில பாகங்கள் பாடல்கள் 'உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக' அமைக்கப்பட்டிருக்கின்றன. பெரும்பகுதி வெண்பாக்களும், இரண்டொரு அகவற்பாக்களுமிருக்கின்றன. இது, திரு. பண்டித கோபாலய்யரவர்களால் வெளியிடப் பெற்றிருக்கிறது.

(3) வீரசோழிய உரையாசிரியராகிய 'பெருந்தேவனார்' என்பவரால் மேற்கோளாக எடுத்தாளப்பட்டிருக்கும் பாரதப் பாடல்கள் வெண்பாக்களாகும்.

**(4)** சரஸ்வதிமகால் நூல் நிலயத்தில் **உள்ள பெருந்தேவனார் பாரதம்-மாவிந்தம்.** இது உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாகவும், செய்யுள் முற்றிலும் இரண்டோரிடங்கள் தவிர வெண்பாவாகவும் எழுதப்பட்டிருக்கிறது.

மேற்கூறிய (1) என்று இலக்கமிட்ட பகுதி சங்க காலத்திய பெருந்தேவனுர் இயற்றியது என்று கொள்வதே சால்புடைத்து. சங்க காலத்திய தொகை நூற்களுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடியவரும், 'திருவள்ளுவ மாலையில்' 'எப்பொருளும்' என்ற முதற் குறிப்புப் பாடல் இயற்றியவரும் இவரே என்று கொள்ளல் தகும்.

இவரது காலத்தை ஆராய்வதற்கு நமக்குச் சில ஆதாரங்கள் உள. கடல்கொண்ட காலத்திற்கு முன்னே நிகழ்ந்த அரிய சம்பவங்களில் ஒன்ருகப் பாரதம் பாடியது குறிக்கப்பட்டிருப்ப தாலும், சங்க காலத்தில் பெருந்தேவனாருக்குப் பாரதம் பாடிய

பெருந்தேவனுர் என்கிற சிறப்புப்பெயர் ஏற்பட்டிருத்தலாலும், இவருடைய பாரதம் கடல்கோளுக்கு முந்தியதென்றே தீர்மானிக்கத்தகும்.

(2) நந்திவர்மன் காலத்திய பெருந்தேவனுர் பாரதத்தின் நடை பிற்காலத்திய நடையாக விருத்தலானும் நந்திவர்மன் புகழ் பாடப்பட்டிருத்தலாலும், இதை இயற்றிய புலவர் நந்தி வர்மன் காலத்தில் உள்ள இரண்டாவது பெருந்தேவனுர் என்று கொள்ள இடந்தருகிறது.

(3) வீரசோழியத்தில் மேற்கோளாக எடுத்தாளப் பெற்ற பாரதப் பாடல்கள் வெண்பாக்களாகவுள்ளன. அவற்றை எடுத் தாண்ட உரையாசிரியர் பெருந்தேவனுர் என்ப. மேற்கோள் பாடல்கள் பாரதப் பாட்டுக்கள் என்றும் குறிக்கப் பெற்றிருக் கின்றன. வீரசோழிய நூலின் காலம் 11ஆம் நூற்றாண்டு என்பது ஆராய்ச்சியாளர் கொண்ட முடிபாகும்.

ஆகவே, அதில் குறிக்கப்பெற்ற பாரதப் பாடல்கள் அதற்கு முற்பட்டதென்றே கூறுமலமையும். பெருந்தேவனுர் என்ற பெயர்கொண்ட மூவருள் இப்பாட்டுக்கள் இயற்றியவர் சங்க காலத்திய பெருந்தேவனுரா அல்லது, நந்திவர்மன் காலத்திய பெருந்தேவனுரா, அன்றி வீரசோழிய உரையாசிரிய ராகிய பெருந்தேவனுரா என்பது ஆராய்ச்சிக்கு உரியதாக இருக்கிறது.

(4) தஞ்சை சரஸ்வதி மஹால் நூல் நிலயத்தில் உள்ள பாரதப் பாடல்கள்: —

இவையடங்கிய சுவடியைக் கண்ணுற்று நோக்குமிடத்து, ஏடுகள் தொடர்ச்சியாக இல்லாமலும், பெரும்பான்மை முதல், இடை, கடைகளில் சிதைந்தும் இருந்தன.

முதலில் ஒன்று முதல் ஒன்பது ஏடுகளும், இடையிடையே மொத்தம் நூற்றுப்பதினெட்டு ஏடுகளும் முற்றுமில்லாமலும் எட்டு ஏடுகள் பாதியாக முறிந்தும் உள்ளன.

இப்பாடல்கள் பாரதத்தின் இறுதிப் பகுதியைச் சேர்ந்தன. இப்பகுதிக்குச் சுவடியில் '**மாவிந்தம்**' என்ற பெயரிடப் பெற்றிருக்கிறது. அதாவது பாண்டவர்கள் சுவர்க்கமென்னும் மகாவிந்தத்துக்குச் சென்ற பகுதி என்பது அதன் பொருள்.

இப்பகுதி உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாகவும், அதன் நடை பெரும்பாலும் நந்திவர்மன் காலத்திய பெருந்தேவனார் பாரதத்தின் நடையை ஒத்தும், இதிலுள்ள உரைநடையும்நந்திவர்மன் காலத்திய பாரதத்தின் நடையைப்போல் இருத்தலால் இது நந்திவர்மன் காலத்திய பாரதத்தின் இறுதிப் பகுதியாகிய சுவர்க்காரோகண பர்வத்தின் பகுதியாகக் கொள்ளத் தகும்.

நந்திவர்மன் காலத்திய பெருந்தேவனார் பாரதத்திலே வெளிவந்த பாரதப் பாட்டுக்களின் முதற்குறிப்பும், இப்பாரதப் பாட்டுக்களின் முதற் குறிப்பும், சில விடங்களில் ஒன்றியிருத்தலால் இவ்விரு நூலாசிரியரும் ஒருவராகவே இருத்தல் கூடுமென்பது உய்த்துணரற்பாலது.

எடுத்துக்காட்டாகச் சில பாடல்களின் முதற் குறிப்புகள் கீழே கொடுக்கப்படுகின்றன.

| **ஸரஸ்வதிமஹால் பாரதப் பாடல்.** | | **ஸ்ரீ கோபாலையர் பதிப்பித்திருக்கும் பாரதப் பாடல்.** | |
|---|---|---|---|
| எண். | முதற்குறிப்புக்கள். | முதற்குறிப்புக்கள். | எண் |
| 530 | கார்வரையை | கார்வரை மேல் | 245 |
| 326 | வம்பவிழ்தார் | வம்பவிழ் தார் | 248 |
| 327 | கோவர்த்தனமெடுத்து | கோவர்த்தன மெடுத்து | |
| 75 | வண்டுவரை மன்னன் | வண்டுவரை மூழை | |
| 68 | வண்டுவரை தன் | வண்டுவரை தன் | |
| 21 | அரவுயர்த்தோன் | அரவுயர்த்தோன் | |
| 24 | அரவுயர்த்தோன் | | |

இந்நூலைத் திருத்தஞ் செய்துகொள்ளவும், ஒத்துப் பார்க்கவும், பலவிடங்களில் தேடியும், கடித முகமாக வினவியும், வேறு பிரதிகள் கிடைக்கப் பெற்றிலெ. ஆதலின், இவ்வோர் பிரதியை வைத்துக்கொண்டே, எழுத்துப் பிழைகளை நீக்கியும், ஐயங்கள் இல்லாதவிடங்களில் விட்டும், பிரதியிலிருந்தவாறு பதிப்பிக்கப் பெற்றிருக்கிறது. கதைச் சுருக்கமும் பாடல்கட்கு ஓர் அகராதியும், அரும்பதங்கட்கு அகராதியும் பின்னே வைக்கப்பெற்றிருக்கின்றன.

இந்நூற் பிரதிகள் கிடைத்து, அவற்றைத் தந்து உதவுவார்களாயின் அடுத்த பதிப்பில் திருத்தம் பெறுதற்கு ஏதுவாகும். பொருந்துமென்று கொள்ளத்தக்க சொற்களும், எழுத்துக்களும் இருதலைப் பகரங்களில் அமைக்கப் பெற்றுள்ளன.

இவ்வாசிரியர் வைணவப்பற்று மிக்குள்ளாரென்பதற்கு இவருடைய பாக்களிலே **திருவாய்மொழியின்** சொற்களும், சொற்றொடர்களும், சில விரவி வருதலே போதிய சான்றாகும். அப்பாடல்களின் பகுதியைக் கீழ்வரும் பாடல்களின் முதற் குறிப்புக்கண்டு தெளிக.

| எண். பாரதப்பாடல். | எண். திருவாய்மொழிப்பாடல் |
|---|---|
| 247 வெள்ளைச்சுரிசங்கு<br>97 வெள்ளை நிறச்சங்கீர்ப்ப | (7-3) வெள்ளைச்சுரிசங்கு |
| 210 கார்மேக வண்ணனே | (10-41) கார்மேக வண்ணன் |
| 333 பூவைப்பூவண்ணன் | (2-3) திருப்பாவை மாரிமலை பூவைப்பூவண்ணா |

இனி, இப்பாரதப் பாடல்களில் சொல்லினிமையும் பொருளமைப்பும் வாய்ந்த சிலவிடங்களைக் குறிப்பிடுவோம்.

**(97) வெள்ளைநிறம் (98) மேற்கடலிற் (128) கரும்புங் கதலி (129) மாரிபெருக (193) உயர்ந்த (194) கண்ணன்றன் (210) கார்மேக வண்ணன் (212) வாழைமுழுமட்ல் (337) மண்ணிரந்து (237) வையத்துவெண்க (130) நாரத்தை புன்னை (245) எட்டெழுத்து (247) வெள்ளைச்சுரிசங்கு (321) பூவினொடு.**

பாரதப் பாடல்களில் மேலே குறிப்பிடப்பட்ட சுவையுடைப் பாக்கள் சிலவற்றிற்குப் பொழிப்புரை வருமாறு:—

(1) 'மேற்கடலில்' என்று தொடங்கும் சூரிய உதய வருணனைப் பாடலில் குளிப்பதற்கு மேலைக் கடலுக்குச் சென்ற சூரியன் உலகிருளைப் பார்த்து விரைந்து கீழ்க்கடல் வழியே தோன்றி ஒளி வீசினான் என்பது பொருட்சுவை ததும்ப அமைந்துள்ளது.

(2) 'கரும்புங் கமுகு' என்று தொடங்கும் பாடல் முத்துப் பிறக்குமிடங்களில் சில கூறியது நோக்கற்குரியதாம்.

(3) 'மாரி பெருக' என்னும் தொடக்கத்தையுடைய பாடல் மழைவளம் பெருகவும், அறம் பெருகவும், வாரிபெருகவும், வளப்பம் பெருகவும், மறைநான்கும் பெருகவும் தன்ம புத்திரர் மண்முழுதுமாண்டனன் என்னுங் கருத்தையுட் கொண்ட இப் பாடல் முற்கால அரசியல் நிலையைக் காட்டுவதறிக.

(4) 'கண்ணன்றன்' எனத் தொடங்குமிப்பாடல் கண்ண பிரானுடைய அவயவங்கட்குக் கமலமலரை ஒப்புக் கூறிய நயம் மகிழ்ச்சி தரத்தக்கது.

(5) 'மண்ணிரந்த' எனத்தொடங்குமிப்பாட்டு மூன்றடி மண் கேட்டு மாபலியினிடம் யாசித்த மாயவற்கு மண் முழுதும் அளித்தனன் எனக்கூறும் சொன்னயம் நோக்கற்குரியது

(6) வாழை முழு மடலின் போத்தை வெள்ளைக் குரு கென்று நினைத்து மீனினங்கள் துள்ளுவதாக வர்ணித்திருப் பதின் நயம் வியத்தற்குரியது.

(7) "வாழை இளம்போதலர் வாளை அடற்குருகுதா மெனஅஞ்சி" இக்கவியில் குருகொன்று அஞ்சியதாக மற்றொரு வகையாக வர்ணித்திருப்பது நோக்கற்குரியது.

**உவமைகள்:—**

48. கார்மேகம் எங்கும் கலந்தெழுந்த வாறேபோல

76 இலைக்கொள்ளி வெள்ளெறும்பே ஒத்தேன்

321. பாலோடளாயநீர் பாலானது போல

322. பூவினோடு புனைந்த நார்போல

272. மாக்குன்றின்மீது மயிற்கணங்கள் வந்தாற்போல

**திருக்குறள் மேற்கோள்:—**

316. "இன்னாசெய்தாரை ஒறுத்தல்" என்னும் குறட்பாவை, நரகத்தழுந்தும் துரியோதனனைத் தன்மபுத்திரன் கண்டு அன்பு கூர்ந்து நரகத்தினின்றும் விடுவித்ததற்கு எடுத்துக் காட்டாகக் கூறியுள்ளார்.

—o—

# கதைச் சுருக்கம்.

——o——

இப்பகுதி வடமொழி வியாசமாபாரதத்தில் சுவர்க்காரோகண பர்வத்தில் வந்துள்ள பகுதியில் ஒருபுடை ஒத்துள்ளதாகும்.

கண்ணபிரான் வைகுந்தம் புக்கபின்னர் பாண்டவர்கள் தம் அரசியலைப் பரீக்ஷித்து மன்னனிடம் ஒப்புவித்து மாவிந்தம் சென்ற வரலாறு மட்டுமுள்ளது. அரசாட்சியைப் பரீட்சித்து மன்னனிடம் ஒப்புவித்துப் பாண்டவர்கள் வனம் செல்லும்போது அமரபோகத்தில், பண்டு, தேவர்கள் அமுதங் கடைந்து ஆலித் தெழுந்த ஆரவாரம் போலப் புலம்பாநின்றது அத்தினபுரம். இவ் வகை நகரிசனம் புலம்புதலும் நகரியில் மகாசனங்கள் சோபங் கண்டு பரீட்சித்துவை நோக்கித் தன்மபுத்திரன் நல்லறிவுணர்த்தி, இராச்சியம் கருகாமே, மண் மடந்தை வருந்தாமே இரட்சிக் கிறாயா? என்று சொல்விப் பின் சென்ற நகரிசனங்களுக்கு அத்தினபுரம் சென்று, அமைதியுடன் இருப்பீராக எனப் பணித்தனன்.

பின், தன்மபுத்திரர் விண்டுபதம் எய்துதலும் ஆயிடைத் தெய்வமாதர்கள் பல்லாண்டிசைப்ப, மணிநெடுந்தேர் மேல் கொண்டு பவளச்சாமரை அருகிரட்ட, வெள்ளி வெண்குடை நிழற்ற, ஒற்றைச்சங்கு முன்னூத வைணவரெல்லாம் தன்ம புத்திரனை எதிர்கொண்டு அழைத்துச் சென்றனராக. தன்ம புத்திரன் வரவுபார்த்துக் கருடவாகனன் மேற்கொண்டு, நீலத் தடவரையில் செந்தாமரைப் பூக்கள் பூத்திருப்பது போல் விளங்குகின்ற புருடோத்தமனை அணுகச் செல்லாநின்ற பொழுது ஈசுரன் முதலாகிய இந்திராதி தேவர்களாலும் காண்பதற்கரிய ஸ்ரீ பாதங்களைத் தன்மபுத்திரன் பொருட்டாக அடியோங்கள் திருவடிதொழும் பேறு பெற்றோம் என்று கூறித் தேவர்கள் எல்லாம் பெருக்கச் சந்தோஷித்து விடைபெற்றுப் போயினர்.

# நன்றி கூறல்

தஞ்சை சரஸ்வதிமகால் நூல் நிலயத்துள்ள நூற்கள் சிதைந்து போகாவண்ணம் வெளியிட்டு உபகரிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் சரஸ்வதிமகால் புத்தக சாலையின் கவுரவ காரியதரிசியாகிய பிர்ம்மஸ்ரீ S. கோபாலய்யர் அவர்கள் B. A. B, L. என்னையும் வருகவென அழைத்து இந்நூலையும் இதுபோன்ற நூற்களையும் வெளியிடுமாறு பணித்தார்கள்.

ஆதலின், அவர்கட்கு எனது நன்றி என்றும் உரித்தாகுக. அஃதேபோல சரஸ்வதிமகால் நூல் நிலய ஆராய்ச்சி ஆசிரியர் பிர்ம்மஸ்ரீ K. வாசுதேவ சாஸ்திரியார் அவர்கள் B. A. இந்நூல் வெளியீடு காரணமாகச் செய்து தந்த உதவி மிகவும் பாராட்டற்குரியது. அன்னார்க்கும் எனது நன்றி உரித்தாகுக.

தஞ்சை,
1—7—50

முத்துரத்னம்,
பதிப்பாசிரியர்.

உ

# "பெருந்தேவனார் பாரதம்"

## [விநாயகர் துதி]

ஓதவினையகலு மோங்கு புகழ் பெருகுங்
காதற் பொருளனைத்துங் கைகூடும்—சீதப்
பனிக்கோட்டு மால்வரைமேற் பாரதப்போர் தீட்டுந்
தனிக்கோட்டு வாரணத்தின் தாள்.

## [திருமால் துதி]

மாலென்ப தாம்பின்னை மால்வரையான் மால் விசும்பின்
மாலின் புயல்காத்த மால்வண்ணன்—மாலரவப்
பேரோத மேனியான் பேரோத நீர்கடைந்தான்
பேரோத மேனியான் பேர்.

உ

ஸ்ரீ கண்ணபிரான் துணை.

# "பெருந்தேவனார் பாரதம்"

# பொழிப்புரையுடன்

## மகாவிந்தம்.

மேதியை வெல்ல வல்லாரில்லை என்ன, நீ விதி இல்லை என்று சொன்னாய், உனக்குமேல் வருகின்றதும், கூறுகின்றேன்; வராமல் காக்கவல்லையாமாகில் காத்துக் கொள்ளென்று உரைத்து, இற்றைக்கு இருபத்தேழா நாளில் பிருமகத்தியானது வருதென்று கூறித் தன்னாச்சிரமமே எழுந்திருந்து போயினான், மகாவிருடி என்றவாறு,

இப்பால் "சனமேசயன்" யாது செய்தானோ எனில்

விதியா றதன்மேல் வினைமுன்னே காப்பதற்கென்
றேதுவார் தம்மை யுடனழைத்து—நீதி
அருந்தவ வேள்வி யதுதுடங்கு மென்றுன்
பெருந்தழலில் நெய்வார்த்துப் பின் (1)

எ-து. வேதவிதியால் வேள்வி இயற்றினால் விதியை வெல்லலாம் என்றுரைத்த, முதுமொழி கொண்டு நூற்றெட்டு வேதவியாதரான(?) விப்பிரரை அழைத்து அக்கினி வளர்த்து ஓமந் தொடங்கி யாது நிகழ்ந்ததோ எனில்,

நெய்பெய் தழல்வளர்த்து நேரிருந்த நித்திரையிற்
றெய்வ மறையவனைத் தேர்வேந்தன்—கையிலோர்
தெர்ப்பையினால் விட்டெறியத் திண்டாடி வேதிய
னும்
அப்பொழுதே பட்டா னயர்ந்து (2)

எ.து. வேதமுனியாய் வேள்வி செய்கின்ற பிர......................*
....................மல் பார்க்கிற விருந்து கேட்பாயாகில் பிரமகத்தியா தோஷமும் உன்மேலுண்டாகிய குற்றமும் நீங்கும் என்றுரைத்துப் பின்னும் பார்த்துச் சொன்னான் வேதவியாசன்.

கருர்பிடா மென்றதனைக் காதலித்து மன்னா
விரும்பிட நீமேலிட் டிருந்தால்—[நெரு]ங்கும்
வினைவிட்டகலு மென்று விதிகடக்குமாதலால்
மனத்திருந் தாராய் மதி (3)

எ.து. கரும்பிடர மென்றதனை மேலிட்டு இருந்து பாண்டவர் புராணங் கேட்டு அவமதியாதே இருப்பையாகில், உன் திருமேனியும் பொற்கென்று பிரமகத்தியும் போமென்ன, அதனைக்கேட்டு யாது சொன்னான் சனமேசயன்

என்மேலிருந்த வினை யகல வெங்குரவர்
தன்மையது வெல்லாம் தவறாமல்—முன்னே
இகழ்ந்துரைத்த தீமை இடர்கெடுமா மாகில்
புகழ்ந்துரைக்க வென்றான் புரிந்து (4)

எ.து. என் குருவங்கிசத்திலுள்ள பராக்கிரமங் கேட்டால் என்மேலிருந்த வினை விட்டகலுமென்றும் அதனையான் கேட்ப [தேவரீர்]அருளிச்செய்வாயாகென்ன,மகாவிருஷி சந்தோஷித்துப் பிழையாமல் † சமுதமும் எடுத்துரைக்கத் தொடங்கினான். அது எங்ஙனமோ எனில்,

---

* சுவடியில் இதற்குப்பின் இரண்டு ஏடுகள் இல்லை.

† சகலமும் என்பது இருத்தல்வேண்டும்.

மாற்றரசர் தங்கள் வலிதொலைத்து மண்ணின்மேல்
ஏற்றரசு செய்தங் கினிதிருந்தான்—நூற்றுவரை
...........லையஞ்சோ ராண்டிருந்தான்
வென்றி முரசுயர்த்த வேந்து. (5)

தன்மபுத்திரன் எவ்வகை இராச்சி(யபாரம் செய்தானோ வெனில்)

[வானம்] மழைபொழிய மாநிலத்தோர் வந்தி
றைஞ்சத்
தானமொடு தன்மந் தலைநிற்ப— நானிலத்தே
செம்பொன் மணிமகுடப் [சேரவே] வீற்றிருந்தான்
அம்பொன் மணி யாசனத்தே யாங்கு. (6)

எ.து. ஆவினம் பெருக, அந்தணர் அறம் வளர, அறநிலைகள் தழைத்தோங்க, வருந்தவத்தோர் மனமகிழச் சிவநெறி வளரச் செங்கோல் செலுத்தித் துட்டநிக்கிரகஞ்செய்து, வேந்தர் திறை அளப்ப ஆறில் ஒன்று கடமை கொண்டு அசுவமேதங் *கிரதுக்கள் பலவுஞ்செய்து நீ........................ன் தன்மபுத்திரன் என்றவாறு.

இப்பால் ஸ்ரீ வாசுதேவர் நிலைமை யாதாயிற்றோ எனில்,

கடல்.................................................
................................................. ந்தரடி பணிய
வங்காச னற்றே(?) நெடியமால் வீற்றிருந்தான்
செங்கோல் விளங்க மதித்து. (7)

இவ்வகை இருந்த ஸ்ரீ வாசுதேவர் ஸ்ரீ பலதேவரை வேறு கொண்டிருந்து யாதருளிச்செய்தார்.

---

*கிரது-யாகம்.

*புகுந்தா லித்தங் கொலிகடல் சூழ்வையம்
அகம்புகுந் தாளுங் கலிதானிற்க—விகழ்ந்தி
..............க்கொன்ருன் மாதவத்தோன்
துய்ய முடையானைத் தொகுத்து. (8)

எ.து. இனித்துவாபர[யு]க முடிவுங் கலியுகத்தில் முதலு மான(தால்) இனித் தன்மசீலரானவர் கலியுகத்தில் நல்லோ ரிருக்கலாகாது. இருந்தால் செய்த தவ(ங்க)ளுங் குன்றித் தன்ம தானங்களும், மற்றும்செய்த அசுவமேதங் கிரதுக்களும் அழிவாய் நரகத்துக் கெய்துவர் கண்டாய். இனி நாமும் இராக்கிஷராகப் பின்பற்றியே போகிறது † கற்பென்று(?) ஸ்ரீ வாசுதேவன் அருளிச்செய்து தன்மபுத்திராதியரிடைக்கு யாது சொல்லித் தூதரை விடுத்தாரோ எனில்,

கருமம் பெரிதுண்டு கார்வரைக் கோர்வார் வார்(?)
குருபதியாரைக் கொடுவா ரென்று[ரு]ன்—உரிமை
யால்
மண்ணளந்து மண்ணுண்டு மன்றிழந்த மண்காத்த
மண்ணுலக மாயோன் மகிழ்ந்து. (9)

எ.து. தன்ம புத்திரனைக் காரியமுண்டென்று கடிது கொடுவாராயாகென்னத் தூதனும் போய்த் தன்மபுத்திரனைக் கண்டு யாது சொன்னான்.

மாயனழைத்தான் வளர்குருநா டாளுகின்ற
தூயபுகழ்த் தருமன் தூதனான்—பேய்முலையை
வாழாம லுண்டான் வளருந் திருநகர்க்குத்
தாழாதே ஏகின்றா னென்று. (10)

இவ்வகை தூதன் சொல்ல யாது செய்தான் தன்மபுத்திரன்.

---

*இக்கவியில் சீர், அடி, தளை பிறழ்ந்துள்ளது. † 'தப்பென்று' இருத்தல் வேண்டும்.

மாணியா மாவலிபால் மூவடிமண் கொண்டானை
காணவியத் தருமன் காதலித்துச்—சேணிலத்துப்
போய்மலரும் புனற்கங்கை நன் னுடன்
மாதாவின் பாலணைந்தான் வந்து. (11)

எ.து. மாதாவாகிய குந்தி தேவியை வணங்கி ஸ்ரீ வாசு தேவன் அழைத்தபடியுஞ் சொல்லிக்கொண்டு போந்து யாது செய்தான் தன்மபுத்திரன்.

ஆயர்புகழ்த் தரும னுடவர்கள் தற்சூழ
மாயனைக் காண்பான் வருகின்றான்—பேய்முலையை
மீட்டுப் பாலுண்டான் விளங்கமதித் துவரைக்
கூ[ட்]டப்பாற் சத்தங் கொண்டு. (12)

எ.து. தன்மபுத்திரன் பதினாலாயிர மிடக்கைச் சின்னமும் யானை, தேர், குதிரை, புடைசூழச் சங்கு பேரிகை கடல் முழங்க ஸ்ரீமத் துவாரகாபுரி யாங்ஙனம் புக்கானோ எனில்,

தருமனும் தம்பியரும் வந்தார்களென்று
நிறையொளிசேர் நீர்வாசல்காப்பீர்-கருமுகில்போல்
வண்ணத்தான் மாவலிபால் மண்ணிரந்து கொண்டாற்கு
விண்ணப்பஞ் செய்கென்றான் வேந்து. (13)

அதுகேட்டுத் துவாரபாலர் ஸ்ரீ வாசுதேவற்கு விண்ணப்பஞ் செய்ய அவரை உள்புகுதவிடுவீராமின் என்னக் கேட்டுத் துவாரபாலருந் தன்மபுத்திரன் அருளிப்பாடென்னவுரைக்க வுள் புகுந்து யாதுசெய்தான் தன்மபுத்திரன்.

மறுதிறத்து வான்சகடுமா வாயுங் கீன்று
அருதிறத்தி லன்றன் னையரும்—வுகிரமுத்தி
மேனியோ னீர்க்கனக வெற்பை யதிரட்டுத்
தான்றாள் பணிந்தான் வந்து. (14)

இவ்வகை ஸ்ரீ வாசுதேவனை அடிவணங்கி யாது விண்ணப்பம் செய்தான் தன்மபுத்திரன்.

**தடத்தருகே வாழை இளம்போ தலர்வாளை**
**அடற்குருகு தாமென் றஞ்சி—உடற்சுருங்கிச்**
**சென்றியற்ற மீனினங்கள் சேர்ந்தொளிக்கும் நன்னாடா**
**இன்றழைத்த தேனோ வெனை.** *(15)*

எ.து. எம்பெருமானே அடியேனை அருளிப்பாடென்று தூதர் வந்து அழைத்த பணிவிடை ஏதென்று தன்மபுத்திரன் கேட்ப ஸ்ரீ வாசுதேவன் யாது அருளிச்செய்தான்.

**கருமம் நினைந்து தரணிதனில் நீக்கும்**
**கருமமது காதலித்தென் கண்டாய்த்—தருமம்**
**தினைத்தனையும் சார்கிலராய்த் தீமைதரும் தீமை**
**வினைப்பயனில் யாம்விழுதல் விட்டு.** *(16)*

எ.து. யானுன்னை அழைத்தபடியைக் கேட்பாயாகில், இவ்வுலகமெல்லாம் கலி வந்தாண்டால் பின்னைத் தன்ம மிட்டாரானவர்களிருக்கு மதுகாரியமல்ல கண்டாய் என்று கீழச் சமுத்திரத்தேற யானும் போகின்றேன். நீங்களும் இங்கே இருக்குதல் போகுதல் செய்மின் என்று உங்களுக்குச் சொல்லுவது பொருட்டாக அழைத்தேன் கண்டாய் என்றருளிச் செய, இதுகேட்டுக் கணமாத்திரை யானும் என் தம்பிமாரும் நின் ஸ்ரீபாதங்களைப் பிரிகை உண்டோவென்று தன்மபுத்திரன் விண்ணப்பம் செய்ய ஸ்ரீ வாசுதேவன் யாது அருளிச் செய்தான்.

திங்களவே(?) தாரணியம் சேர்ந்திருக்க வேணுமென்று
உங்கள் தனக்கே உடன்சொல்லி—வங்கக்
† கடல்சூழ்ந்த மண்ணெல்லாம் பொங்கி வரும்
நூற்றுவரு மாளப் பொருதுனக் கேயாக்கியதிறல்
வீற்றிருந்தா(ன்) ஆசனத்து மேல். (17)

எ.து. துரியோதனாதிகள் நூற்றுவர் உன் மித்துருவாந்தவத்தாரையும் ஈடழித்துத் துரோணன், கிருபன், கன்னன், சல்லியன், சகுனி தொடக்கத்தாரையும் பொருது கொன்று இவ்வுலகமனைத்தும் நின்னதேயாக்கி ஆளாநின்றாய். நீ என்னோடு இராச்சியத்தினைத் துறந்து போதுதற்குக் காரணம் ஏதென்று ஸ்ரீ வாசுதேவர் அருளிச்செய்யத் தன்மபுத்திரன் யாதுசொன்னான்.

ஈரொன்ப தின்மரோடும் எழுபதின்மரோடும்
தேரும் பொருந்துந்திசை அழித்தாய்-காரணத்தால்
கஞ்சனையுங் காய்ந்தாய் கடல்வண்ணா நீசெய்த
வஞ்சனை காணன்றோ விம்மன். (18)

அன்றியும்,

பாரதப்போர் பயின்றுவித்தும் பார்த்தனுக்குத் தேரூரச்
சாரதியாய் முன்னே தனிநடந்தும்—மக்கட்கு
ஒப்பரா மதுவாய்மை பண்ணினாய் எங்களுக்கு
உன்னைவிடக் காரியமென் னோது. (19)

எ.து. பூமி தேவியின் பொறை தீர்க்கவும் கஞ்சன் வதை நிமித்தமாகவும் தேவர்கள் யுத்தத்தில் பிழைத்த வீரிய அசுரரைக் கொல்லவும் பாரதப்போருக்கு நிமித்தனாகியும் நீயே நின்று கொல்லுவித்து இயன்றால் பாதகமில்லையென்று, ஒருவர்க்குப் பக்கமாக நின்று வெற்றிகொண்டு இம்மண்ணெல்லாம் எனக்குத் தந்தருளினாய். பூர்வவிதியின் பயனன்றோ, என்று உள்ளபடியே தருமபுத்திரன் விண்ணப்பஞ் செய்ய ஸ்ரீவாசுதேவன் முறுவலித்து யாது அருளிச்செய்தான்.

---

† இவ்வடி மிகுந்துள்ளது.

வீமன்விசய னென்றிரண்டு வெங்கோப யானைகளே
போர்வென் றழிந்தலால் போர்வேந்தே—எம்முனைக்கண்
என்னைநீ கூறி லிதுவே தகாதென்றான்
முன்னைப் பயனை முயன்று. (20)

எ.து. "அர்ச்சுனன் என்னும் அங்கியும் வீமன்என்னும் வாயுவும் இரண்டுங்கூடி பாரதயுத்தம் சயித்தது, என்னாற் செய்யப்பட்டதில்லை" என்று ஸ்ரீவாசுதேவன் அருளிச்செய்யத் தன்மபுத்திரன் யாது விண்ணப்பஞ் செய்தானோ எனில்,

எனக்கு மெனக்கிளைய தம்பியர்தங் கையால்
மனக்கினியார் மாண்ட பழிதா—னெனக்கோர்
மதியினத்தார் மாதவங்கள் மண்ணின்மேல் நீங்கும்
கதியினைத்தான் வென்றான் கடந்து. (21)

எ.து. இராச்சியத்தின் பொருட்டுத் தன் மித்துருவாந்தவத் தாரையெல்லாங் கொன்று, அரசாண்டான் தன்மபுத்திரன் என்னுஞ்சொல் பாரிடமெங்கும் நிகழ்ந்ததாலிப் பழி நீங்கும் வண்ணம் எனக்கு அருளிச்செய்வாய் ஆகென ஸ்ரீ வாசுதேவன் அருளிச்செய்தான் என்றவாறு

கொற்ற முரசுயர்த்த கோவேந்தர் கூறுங்கால்
உற்றவினை நீகொன்ற வூழ்வினை—வெற்றிகொள்ள
வேண்டுதிரே மாவிந்தம் வெங்..................................
.................................................. ........................ (22)
*

பதினாயிரம் வேதவித்தியாதரர் சேவிப்பத் திருவோலக்கம் எழுந்தருளியிருந்தான், இப்பால்,

ஐயிரண்டு மீரிரண்டு மவ்வளவிற் பிள்ளைகளும்
மெய்திரண்டு தோளால் மிகவிரும்பிக்—கைதிரண்டு
நின்றுவிளை யாடுவார் நீணகலா மாதவத்தோர்
சென்றவனைக் கண்டார் தெளிந்து. (23)

---

*இதன் பிறகு சுவடியில் இரண்டு ஏடுகள் இல்லை.

எ.து. அந்த நகரியில் பிள்ளைகளெல்லாந் திரண்டு ஒருவனைக் கருப்பிணியாகச் சீலையை வயிற்றகத்தில் கட்டிக் கொண்டு விளையாடா நின்றகாலத்துத் தேவர்கள் பணியினால், அத்துருவாச மகாவிருடி துவராபதியைச் சாபமிட வேண்டிப் பிள்ளைகள் நிற்ப, மகாவிருடியைக்கண்டு பிள்ளைகள் யாது சொன்னார்.

**விளையாடு போதின்கண் மெய்ந்தோ மிவன்தான்**
**களைகா ணிலாள்போற் கலங்கும்—தளையாடு**
**மாணோபெண் ணோவீ தறியோ மருந்தவத்தீர்**
**பெண்ணீர் கூறும் பெயர்த்து.** (24)

எ.து. இவள் வயிற்றில் பிள்ளை ஆணோ பெண்ணோ வென்று சொல்லுவீராமின் என்று பிள்ளைகள் மகாவிருடிக்குச் சொல்லுமளவில் யாதுசொன்னான் மகாவிருடி.

**இந்தஇவள் வயிற்றில் வந்தோரிருப் புலக்கை**
**புந்தியி லும்மைப் பொடியாக்க—வந்து**
**பிறக்கு(மா மென்று பெருந்தவத்தோன் சொல்லச்**
**சிறக்குமா லிப்போதிற் சென்று** (25)

எ.து. இவள் பெறுவதோ ரிருப்புலக்கை யாதலால் உங்களுக்கும் உங்கள் சுவாமிக்கும் மிருத்துவாவ தென்று மகா விருடி சாபமிட்டுப் போயினான். அப்பொழுது பிறந்த இருப்புலக் கையைப் பிள்ளைகளெல்லாம் பற்றிக்கொண்டு போ யாது செய்தார்.

**மெய்கள் விதிர்விதிர்த்து வேர்த்துமிக நடுங்கிக்**
**கையதனாற் பற்றிக் கடுகிப்போய்ச்—செய்யமலர்**
**கண்ணன்பாற் றான்சென்று காதலித்துக் கட்டுரைத்தார்**
**வண்ண வுலக்கைதனை வைத்து.** (26)

எ.து. பிள்ளைகளெல்லாம் இருப்புலக்கையைப் பற்றிக் கொண்டுபோய் ஸ்ரீ வாசுதேவருக்குக் காட்டச் சொல்லுவார். தாம் விளையாடினவாறும், மகாவிருடி சாபமிட்டவாறும் சொல்லி

நிற்ப ஸ்ரீ வாசுதேவனும் பயப்பட்டுப் பிள்ளைகளை நோக்கி யாது அருளிச் செய்தார்.

**மாதவத்தோர் சாபம் வழுவாவதை வருமால்**
**ஏதவிருப் புலக்கை எள்ளளவும்—போதாமல்**
**தராதலத்தில் வீழாமல் தக்கவரங்கொண்டே**
**அராவிடுங் கோளென்றார் அறிந்து. (27)**

இருப்புலக்கை யாவரும் பெறுவாரில்லை. இது நம்மைக் கெடுக்குமாதலால், மகாவிருடி வரம் தப்பாது இ[வ]ற்றைப் பொடியாகப் *பித்தளவன்றியேயராவி இப்பொடி எல்லாம் கொண்டுபோய்ச் சமுத்திரத்திடுமின், என்ன அவர்கள் ஆங்கோர் அரங்கொண்டு பொடியாக்கி யாதுசெய்தார்.

**இப்பொடி எல்லாம்வாரிப் புழுதியுட னாங்கே**
**அடியின்மேற் றான்படா வண்ணங்—கடிதன்னை**
**யன்றெடுத்துக் கொண்டாங் கனவினுடன் பெய்தார்**
**குன்றெடுத்தார் கூறக் கொணர்ந்து. [28]**

எ.து. இப்படி இவர்கள் சமுத்திரத்திட்ட இருப்புலக்கைப் பொடி யாது செய்ததோ எனில்,

**எழுகடலி னுட்பெய் திடவிருடி சாபம்**
**வழுவின்றி வார்கரையிற் சேர்ந்தங்—கொழுகுபுனல்**
**மண்டிஎழுந் தெங்கும்வளர் சம்பினுடன் பொழிந்தார்**
***பிண்டி பாலானதே பின்பு. (29)**

எ.து. மகாவிருடி சாபம் பழுதுபோகாதாகவின் ஓதமெறிகரை சேர்ந்து பொடியிரும்பெல்லாம், கூடிப் பிண்டி பாலுருக்கொண்டு சம்பாய் நின்றதென்றவாறு.

---

*பித்தம்—மண்வெட்டியின் அடி உறுப்பு.
*எறிபடைவகை, பிண்டிபாலத்தை ஏந்தி. சிந். 2269.

அப்பொழுது ஸ்ரீமத்துவராபதியில் பிள்ளைகளாக விருந்துள்ள இராசகுமாரருங்கடலாடி, விளையாடாநின்ற காலத்து யாதருளிச் செய்தாரோ எனில்,

**பண்டைமுனி சாபம் பரந்துபல சம்பாகி**
**மண்டுகடல் பார்மேல் வளர்ந்ததனைக்—கண்டுதங்கள்**
**கையாற்பறித்துக் களித்தார்த்து வார்மணலில்**
**தொய்யாநின் றுடிஞர் சூழ்ந்து. (30)**

எ.து. பிள்ளைகளெல்லாம் சம்பின் கோலாகக்கருதி, ஒரொன்று தாம் கைக்கொண்டு யாது செய்தாரோ எனில்,

அருந்தவத்தோன் சாபத்தால் ஆங்கெங்கும் சம்பின்
குருந்தெழுந்த தோரொன்றாக் கொண்டு—பெருந் [திரையில்
ஓடினார் ஓடி இகலிஎதி ரெதிரே
சாடினார் தம்மில் சலித்து. (31)

இவ்வகையே பதினாறாயிரம் குமாரர்களும் தம்மிற்படை பொருது எறிந்து மோதியும், ஒருவர் சோராமல் உள்ளபடியே மடிந்தார்கள். அப்பொழுது பிள்ளைகள்பட்ட சேதி ஸ்ரீ வாசு தேவற்கறிவிப்ப, அவருந் தம்மிலே சிந்தித்திருப்ப ஸ்ரீ பலதேவர் யாது சொன்னார்.

ஒட்டிவந்த நாளிருநூ றாயிரமிவ் வொண்பதியில்
மட்டவிழ் தாராய்வந்து மண்ணாண்டோம்—பட்டனரோ
நங்கிளைஞ ரெல்லாரு நாமுமினிப் பாற்கடற்கே
அங்கணையச் செல்[வோமினி]* (32)

அப்பொழுது அவ்வனத்திலிருந்த வேடன் யாது செய்தான் என்றவாறு.

---

* இதற்கடுத்த ஏடு (27-வது) இல்லை.

அங்குட்ட மான பிரமாணத் தவ்விரும்பை
வங்கக், கடல் மீன் வயிற்றகத்தே—தங்கியதோ[ர்]
அம்பாகக் கொட்டி அருங்கானி லெய்தினான்
வெம்பாவ வேட்டைக்கு மிக்கு. [33]

எ.து. மகாவிருடி சாபத்தால் வந்து தோன்றிய இருப்புலக்கையை அராவிச் சூழ்கடலின்கண்ணிட அங்குட்ட பிரமாணத்தோரிரும்பு மீன் விழுங்க, அம்மீன் வலையிற்பட, ஆங்கதனை ஒருவேடன் வாங்கி அம்மீனைப் பிளக்க அம்மீன் வயிற்றில் கிடந்த இரும்பைக்கண்டு மிகப்பிரியப்பட்டுத் தன்னம்புக்குத் தலையாகவிடக் கொண்டு செல்லாநின்ற காலத்து, ஒருநாள் வேட்டைக்குப் போய் ஒரு மானைக்கண்டு அம்பு தொடுத்தெய்யவேண்டி யாது செய்தான் வேடன்.

வில்வளைய வாளி தொடுத்தந்த வெங்கானில்
செல்லுங் கலைமான் செறுத்தந்த - ஒல்லையம்பை
உற்றவந்தா னெய்யவது ஓடியதே மாதவன்மே
லற்றமுன் சாபத்தா லாங்கு. [34]

எ.து. பூர்வ விதியினாலே வேடனுக்கஞ்சி ஓடுகிற மானைத் தப்பி வடவிருட்சத்தின் கீழே யோகமாக எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ வாசுதேவன் ஸ்ரீ பாதாம் குண்டத்து உருகுதலுங் கண்டு வேடனு மதி பயமெய்தி மானைப் பிழைத்த அம்பு மனிதரைப் பட்டது போலும் என்று அம்பு தேடிச் செல்லுகின்ற வேடுவன் ஸ்ரீ வாசுதேவரானதுவும், தன் கை அம்பு பட்டதுவுங் கண்டு யாது செய்தானோ வெனில்,

இனமானை யானெய்ய வெங்கோனு மோடி
உனயோ திருந்தமா வின்பகற் - றஞ்கானிற்
பட்டவா வென்று பதைத்துப் பயமாகிக்
கெட்டேனென விருந்தான் கீழ். [35]

எ.து. எம்பெருமானே நின்னாலறியப்பட்டதில்லை. இனி என்னைக் கொல்வாயாகிலும் இரட்சிப்பாயாகிலும் திருவுள

மென்று பாதாங்குட்டத்தில் சுரோணிதத்தை யமைத்து ஸ்ரீ பாதத்தின் கீழிருந்து பிரலாபிக்கின்ற வேடனைப் பார்த்து யாதருளிச் செய்தான் ஸ்ரீ வாசுதேவன்.

என்னை நீயஞ்சா திருங் கானில்
முன்னை வினைகாண் முரண்வேடா—மன்னுபுகழ்
பார்த்தனைக்கொண் டிங்கணைவா யாகென்றான் பஞ்சவற்கு
வார்த்தைதனைச் சொல்லீர் மறித்து. (36)

எ.து. வாராய் வேடனே நின்னால் ஒரு தோஷமுமில்லை. இதுவெல்லாம் பூர்வ விதியே கண்டாய் என்று வேடனைத் தேற்றி நானென் சீவன் விடுவன் முன்னே அத்தினபுரம் புகுந்து அர்ச்சுனனுக்குச் சொல்லி ஈண்டன் கொண்டுவருவாயாகென்று அருளிச் செய்து விடை கொடுப்ப வேடனும் பரவசப்பட்டு விடை கொண்டுபோய், அத்தினபுரம் புகுந்து அர்ச்சுனன் கோயில் வாசல் குறுகித் துவாரபாலரைக் கண்டு சொல்லுவான் ஸ்ரீ வாசுதேவன் தூதனானோவென்ன வந்தேன் என்று அறிவிப்பீரா மென்ன, அவர்களும் சென்று தன்மபுத்திரனும் அர்ச்சுனனுக்கு அறிவியுங்களென்று கூறவும், உடனே அர்ச்சுனனுக்குத் துவார பாலர் சொல்ல அவனும் வந்த தூதனை வரவிடுவீராமென்று சொல்ல வேடனும் வந்து அர்ச்சுனனை முன்கண்டு புகுந்தபடி எல்லாம் விண்ணபஞ் செய்ய அர்ச்சுனனும் யாது செய்தான்.

வில்வேடன் சென்று விசயற்கு வேறாகச்
சொல்லியவா றெல்லாந் தொழுதுரைப்ப—ஒல்லையிற் போய்
மாமுரசமுன்னும் மன்னவற்கு மற்ற தெல்லாம்
கோமதலை கூறும் குறித்து.

என்பது வேடன் சொன்ன வார்த்தை எல்லாம் தன்ம புத்திரனுக்கு அர்ச்சுனன் விண்ணப்பம் செய்தான்.

என்னை வருகவென்று அருளிச் செய்தானாகில் பின்னை நானருளிப் பாடுண்டானாள் வருகின்றேன். நீங்களிருவரும்

போய் மாதவன்பால் புகுந்த தெல்லாமறிந்து வருவீராமென்ன, வீமார்ச்சுனற்கு விடைகொடுப்ப வேடனை முன் கொண்டு போயாது செய்தார்

குருக்களில் முன்பிறந்த கோவேந்தன் கூறிப்
பொருப்பனைய தோளாரும் போந்து—செருக்கண்
மணிநெடுந்தேர் முன்னூர்ந்த மாதவன்பால் வந்தார்
அணிநெடுந்தே ரேறி யவர். (38)

என்பது இவ்வகை இருவரும் தேரேறி அத்தினபுரம் புறப் பட்டுப் போந்து பலதுன்னிமித்தங்களும் கண்டு யோகமாக எழுந்தருளி இருந்த வடவிருட்சத்துக்கு நேரே சென்றபொழுது,

மாயனிருந்த நிலைமைதனைக் காண்டலுமே
நெடித்தாய மன்னவர்கள் நெஞ்சுருகித்—தாயஞ்சேர்
நூற்றுவரை அன்றேவி நேர்பரித்தே ரூர்கண்ணை
போற்றியென வீழ்ந்தார் புரண்டு. (39)

இவ்வகை திருமேனியில் தளர்ச்சியும் சுரோணிதமுங் கண்டு ஸ்ரீ பாதங்களிருகையுறப் பூண்டுகொண்டு பிரலாபித்த இவர்களை நோக்கி ஸ்ரீவாசுதேவன் யாதருளிச் செய்தான்.

இதுவெனக்குக் காலமிகல் வீமா பார்த்தா
விதிநினைந்து வேறுநீர் வேண்டாங்—கதுமெனப்போய்
வண்டுவரைக் குள்ள மாநிதியும் மாதரையும்
கொண்டுபோ மென்றூர் குறித்து. (40)

எ.து. இது எனக்குக் காலமாதலால் நீங்களிருவரும் போய் ஸ்ரீமத் துவராபதி புகுந்து, அணி இழையாரையும், என் மகாபண்டாரமும் மற்றங்குள்ள மாநிதியமும் சாத்திரங்களும் எல்லாம்கொண்டு, அத்தினபுரம் புகுவீராமின் என்று அருளிச் செய்யுமளவில் தேவர்கள் புட்ப வருடம் பொழிந்து சதுர்

வேதங்களைப் பாடி வந்தெதிர்கொண்டு ஸ்ரீ கருடனை நினைந்தருள அவனுமப்பொழுது அஞ்சலியத்தனாய்ப் பஞ்சாயுத சகிதனாய்ச் சங்கு சக்கரதரபாணியாய், மாண்ட*

ஸ்ரீசங்குவாய் வையத்தார் தமக்கு நீ
இங்குரிமை பூண்டே விசையா—இவ்விடத்தில்
வேல்வேந்தன் மாண்டாற்குச் செய்யும் வழக்கு (41)

எ.து. இவற்குத் தாழாதே வேண்டுங் கிரியைகளெல்லாம் செய்து நம்மைத் துறந்துகொள்வதென்று வீமசேனன் சொல்லிப் பின்னும் யாது சொன்னான்.

ஐவோரு முந்தன் அடைக்கலமாய் வாழ்வோமை
பொய்போல விங்ஙன் புறத்திட்டுச்—செய்தான்
மருவுந்தோள் மார்பா மறந்தனையோ வெங்கள்
செருவினியிற் செய்த திறம். (42)

அன்றியும்,

கோவர்த்தன மெடுத்துக் கோனிரையைத் தான் [மேய்த்தும்
மாழ்தக்க புள்ளின் வாய்பிளந்தாய்—பூவின்
மடந்[தை]தனைக் கைவிட்டு மண்மேல் அவமாய்க்
கிடந்தனையோ வென்றான் கிளந்து. (43)

அன்றியும்,

காண்டா வனத்தைஇன்று கருதித் தனிவாட்ட
நீண்டபெருந் தேவனாய் நீயருள—ஆண்டமக்கோர்
மாதவனாய் மைத்துனனா மாபாரதம் பொரவோர்
தூதுவனாய் நின்றிலையோ சொல். (44)

*33, 34 இவ்விரண்டு ஏடுகளும் இல்லை.

என்றிவ் வகை,பலவுஞ் சொல்லிப்பிரலாபித்து ஸ்ரீபாதங்களிலே கிடந்தரற்றுகின்ற அர்ச்சுனனை எவ்வண்ணத்தாலுந் தேற்றி இனித் தாழாதே சங்காரஞ் செய்வாயாகென்று அர்ச்சுனனும் அரிதாகத் தேறி அக்கினி வளர்த்துத் தருப்பையும் சமித்தையும் பரப்பி, வெண்பொரியும் வெண்பூவும் தெளித்து நீதிமார்க்கம் வழுவாமல் வேதமார்க்கமே செய்து சர்வ திக்குகளில் உதகங் கொண்டுவந்து வீமசேனன் கொடுப்ப உதக கிரிகை செய்து அக்கினி மூட்டி அனல் கொளுத்தினன். அர்ச்சுனன் அப்பொழுது வேண்டும் கிரியை பண்ணின பின்னை அங்கு நின்றும் வீமசேனனோடும் துவாரபதி புகுந்து அர்ச்சுனன் யாது செய்தான்.

ஐயாறு நாளங் கணிநகரத் துள்ளிருந்து
வையகத்தோர் தான்செய்யும் வான் முறையால்—
வாய்த்தனடை வெல்லாம் வழக்காக வாய்ந்தபுகழ்
பார்த்தனவன் செய்தான் பரிந்து. (45)

இவ்வகை ஸ்ரீமத் துவாரபதியிலிருந்து ஸ்ரீ வாசுதேவற்கு வேண்டும் கிரியைகளெல்லாம் செய்து, நிற்குமளவில் ஸ்ரீமத் துவாரபதிக்கு யாது நிகழ்ந்ததோவெனில்,

ஆழிநீர் வண்ண னருளாலே அந்நகரி
மூழையது வெழுந்து மூடிற்றே—ஊழி
யுகம்புகுந்த வாங்கே யுறுநீர்தான் வையத்
தகம்புகுந்தா ழுங்கடல்நீ ராங்கு. (46)

எ.து. ஸ்ரீ நாராயணன் பணியிலும் வருணராசனுக்குத்தான் முன்னமே வேண்டிக்கொள்கின்ற சமுத்திற்குள்ளே சிறிதிடம் தர வேணும் என்றருளிச் செய்ய வருணராசனிடம் கொடுத்து ஸ்ரீமத் துவாரபதியென்று படைவீடு செய்திருந்து ஸ்ரீவைகுண்டமேறின பின்னை முன்னம் இவ்வண்ணமேயாக வேணுமென்று, வரம் பிழையாது மற்றந்த நகரிக்கு மூழை புகுதவேண்டித் துவாரபதி நீங்கிக் கலிபுகுந்ததனோடு மூடிக் கொண்டதென்றறிக. அப்பொழுது அதுகண்டு வீமார்ச்சுனர் யாது செய்தார்.

வண்டுவரை தன்னிலுள்ள மாநிதியும் வாம்பரிமா
கெண்டையங்கண் மாதருடன் கேசவன்றன்—
பண்டார(ம்)
உள்ளதெல்லாம் கொண்டுவர வோங்குவரை வாணர்
கொள்ளைகொண்டா ரெல்லாம் குறித்து. (47)

அணியிழையாரையும், மாநிதியையும், ஐம்பதினாயிரம் மதகரியும் இருபதினாயிரம் மணிநெடுந்தேரும், அறுபதினாயிரம் பாய் புரவியும், மற்றுமுள்ள பண்டாரமனைத்துங் கொண்டு வீமசேனன் கடைக்குழை தாங்கவும், அர்ச்சுனன் முன் தாங்கவும், அத்தினபுரம் நோக்கிப் போகாநின்ற பொழுது,

*கார்மேக மெங்கும் கலந்தெழுந்த வாறேபோல்
போர்வேட ரெங்கும் புகன்றெழுந்தார்—சீர்மேவும்
மாநிதியுங் கொள்வார் மடவார் துகிலுரிவார்
தார்விசயன் காணவே தான். (48)

எ.து. கார்மேகம் போல வேடரெல்லாம் திரண்டு வந்து வீமார்ச்சுனர் கண்டு நிற்கவே ஆயிழையாரைத் துகிலுரிவாரும் ஆபரணங்களைக் கழற்றிக்கொள்வாரும், மணிநெடுந்தேரும் மதகளிறும், வயப்புரவியும், கைக்கொள்வாரும், மகா நிதியும், சூறைகொள்வாருமாக நின்றபொழுது,

*இடும்பனையும் பேகனையு மேற்றி யிருங்கானில்
கடும்போரில் நூற்றுவரைக் காய்ந்தான்—அடங்கலரை
வென்றடர்த்து நின்ற விறவீமன் வீரியமும்
குன்றியதா லூக்கங் குறைந்து. (49)

---

*கற்பனைப் பாடல்.

*இப்பாட்டுக் கற்பனையுடையது.

எ.து. இடும்பனையும், பேகனையும் கொன்று சரா சந்தனைப் பிளவு செய்து, துர்ச்சாதனனை மறக்களத்திற் கொன்று சுரோணிதமும் பருகித் துரோபதையுமிருந்து தன் மனக் கருத்து மூடி வீமசேனன் வரப்பலன்களும் குறைத்து நின்றமை கண்டு நாராயணன் பலமல்லது இவரால் ஒரு பலன்களு மிருந்ததில்லை என்று தேவர்கள் கண்டு சொல்லா நிற்ப.

இனி, வீமார்ச்சுனர் சத்தி குன்றினபொழுதே அகலிடத் தாற்கும் அழிவன்றோ என்று தேவர்களும் திகைத்து இருக்கு மளவில் அர்ச்சுனன் சிறிது தாங்கலுற்றானுக்கு யாது நிகழ்ந்ததோ எனில்,

† கங்கைமகன் முதலாங் கன்னனையே யுள்ளிட்ட
அங்கவர்க ளெத்தனைநூ றாயிரவர் — பங்கப்
படமலைந்த பார்த்தன் பகழிதொடுத் தெய்ய
உடலகவா வாங்கண் தொழுது. (50)

எ.து அக்கினி தேவன் ஆங்கறிவிப்பக் காண்டாவனந் தீயெழுப்பி மகாதேவருடன் யுத்தம் செய்து மகாபாரதப் போரில் வீடணன் கன்னன் மற்றுமுள்ள எத்தனையோ ஆயிரமிராசாக் களைக் கொன்று பூமி பாரந்தீர்த்து தர்மபுத்திரனுக்கு இராச்சியங் கொடுத்த தோள்கள் வலிகுறைந்து அர்ச்சுனனுக்குக் காண்டீபம் வாங்கவொண்ணாதாயிற்று.

இவ்வகையே பட்டார் படவும், பிடிபட்டார் பிடிபடவும், போய் அத்தினபுரம் புகுந்தார் வீமார்ச்சுனர் என்றவாறு.

இவ்வகை சென்ற இருவரையும் கண்டு தன்மபுத்திரன் யாது சொன்னான்.

---

† கற்பனைப் பாடல்

மணிவண்ணற்குத் தீங்குளவோ மன்னர் காள்
நீங்கள் திருமுகத்தில் வாடியவா— செப்பார்கொல்
துவராபதி வாக்கைச் சொல்லா துமக்குக்
கவரான தெல்லாங் கரிந்து. (51)

என்றிவ்வகை தன்மபுத்திரன் கேட்பவும் மிலைச்சித்தெதிர் முகம் நோக்காது வீமார்ச்சுனர் புகுந்தபடி சொல்ல அது நிற்ப அர்ச்சுனன் நமஸ்காரஞ் செய்து தன்மபுத்திரனை வணங்கி யாது செய்தானோ எனில்,

தங்கோன் மணியிற் றனஞ்சயனும் வீமனும்போய்ப்
பொங்கா ரணியம் புகுந்ததற்பின்—செங்கண்மால்
சென்று புரஞ்சோதி சேந்தனவும் சீர்சோதி
ஒன்றினவுஞ் சொன்னா ருவந்து. (52)

அன்றியும்,

வண்டுவரை மூழை எழுந்ததுவும் நன்னெறியில்
விண்டவர்கள் சூறைமிகுத் தாடினவும்—பண்டெதிர்ந்து
மாற்றானார் சார வளர்வாகு குன்றினவும்
வேறாகச் சொன்னான் விரிந்து. (53)

எ.து. தன்மபுத்திரன்

வந்ததெல்லாம் நீர் கூறுமின், அன்னிய முண்டாகின்றது. தீர்ப்பன் புகுந்த வண்ணமெல்லாம் உரைப்பீரா மென்னப் பின்னும் சொல்வான் தன்மபுத்திரன்.

மன்னர் *கடுகி வந்துதுனுக் கென்ன
வன்னமணி ஓசை எடுத்தீர்—உன்னியது
கட்டுரைமின் என்றுரைத்தான் கார்வயல்சூழ் நன்
னாடன்
†எட்டுணையுங் குன்றா தெடுத்து. (54)

---

41, 42 இந்த இரண்டு ஏடுமில்லை.

*கருகிவந்து, பாடபேதம். †எட்டணையும்—பாடபேதம்

எ.து. பிராமணர்காள் உங்களுடைய அபிதாயம் கேட்டுக் குவலாகப் பயந்தேனாகின்றேன். உங்கள் நியாயம் உரைப்பீரா மென்னத் தன்மபுத்திரனை நோக்கிப் பிராமணர் சொல்லுவார்.

இந்த மறையோன் எனக்கோ ரகம்விற்றான்
அந்த வகத்திலடையுமோ ருதியம் எந்தன்
பெருமானே யான்பெறுதல் பேசுங்கால் வேண்டேன்
அருமறையோ ராக மிது. (55)

இந்தப் பிராமணன் எனக்குச் சிறிது பூமி விற்றான். அந்த நிலத்தை யானும் உழுவிப்ப அந்தப்பூமியில் சிறிது திரவியம் கிடந்தது. இந்தத் திரவியத்தை நீ கொள்ளென்று கொடுப்பக் கொள்ளேன் என்கின்றான். பிரானே என்ன, அவனுக்குப் பூமி கொடுத்த பிராமணனை நோக்கித் திரவியம் வாங்கிக் கொள்ளோ மென்பது, தக்கதன்றென்று தன்மபுத்திரன் கேட்ப பூமி கொடுக்கும் பிராமணன் சொல்லுவான்.

என்னா லறியப் படாத விருநிதியம்
மன்னாஎனக் கதனால் வாழ்வொழிந்தேன்—முன்னாள்
விலைகொடுத்த நாளே கொடுத்தேன்பின் கொள்கை
புலைமகட்கு(ம்) ஆகாப் பொருள். (56)

என்பது. பிரானே யான் பூமி கொடுத்தவன்றே அப்பூமியில் கிடந்த திரவியமும் அவனதே என்றும், எனக்கது பொருளாவது யானறிந்ததாகில் அன்றோ என்றும், தானறியாத பொருள் கொள்ளலாகாதென்றும், பூமி கொடுத்த பிராமணன் சொல்லப் பின்னும் யாது சொன்னான் தன்மபுத்திரன்.

பண்டுன் வழியுள்ளார் வைத்த பழம்பொருளைக்
கொண்டிடுவ தல்லாது கூறுவதென்—எண்டிண்சயுப்
ஏய்ந்த புகழ்மறையோ ரீண்டீன்று கொள்கவென்றான்
ஆய்ந்த முரசுயர்த்தோ னாங்கு. (57)

எ.து. உன்னுடைய மூதாக்கள் வைத்த பொருள் நின தன்றோ கொள்ளாயென்ன எனக்கு ஆகாதென்று பிராமணன் மறுத்திடலும் இதற்குச் செய்வதேது மறியாத பட்டர்களை அழைத்துக் கேட்பப் பட்டர்கள் யாது சொன்னார்.

மஞ்சாடு சோலைசூழ் நாடாளு மன்னவனே
அஞ்சாறு நாளி லறியலாம்—வஞ்ச
மறையவர்கள் தங்கள் வழக்கிதனைக் கேட்க
இறையவனே என்றா ரிசைந்து. (58)

எ.து. இவர்கள் வழக்குச் சொல்லுமளவில் அஞ்சாறு நாளைக்கு * அவதி வேணுமென்று அப்பிராமணர் இருவரையும் வேறு கொண்டுபோய்க் கேட்டுக்கொள்ளுங்கள். உங்கள் வழக்கு வீடறுத்துச் சொல்லுகிறோமென்று சொல்லி விடுமளவில் யாது நிகழ்ந்ததோ எனில்

கையால் நடந்து தலைகீழாய்க் கால்மேலாய்
பொய்யால் மிடைந்த புகழ்சூடி —வையம்
வலிகவிந்து தக்கோர் வழக்கழிய வந்
கலிபு குந்தான் காசினியிற் காய்ந்து. (59)

எ.து. அப்பொழுது வழக்காளற்குப் பட்டர்கள் விதித்த நாள் வந்துறுதலில் கலியது வழக்காளற்கு முன்னே அத்தினபுரம்புக்குக் காலிரண்டு மேலாகித் தலைகீழாய்க் கையால் நடந்து புகா நிற்க நீதி அறிந்து நெறி குன்றிப்போய் வாய்ந்ததாகக் கருதுவது.

அப்பொழுது,

வழக்கைப் பிணங்கித் தவவலிமையாற் பற்றி
சழக்கோடித் தக்கோர்க ளிடத்தம்மை உழக்கின்றே
உள்ளாற்றித் தீதை யிருந்துநலிந் திட்டதே
கள்ளத்தால் வந்த கலி. (60)

எ.து. கலி புகுந்த காரணத்தினால் தன்மதானங்களும் இன்றி, ஆதித்தியகிரணங்களும் சுருங்கிப்போய்க் கலிவருகிற் றென்றவாறு

அப்பொழுது,

பொருள்சுமந்த அந்தப் பொருளெனதே என்றா
னருளஞ்சி நீங்கிய பின்னிற்—பொருளு
மஞ்சினான்கொள் ளென்றானு நன்னிதிய மெல்லாம்
உன்னதே என்றா னிசைந்து. (61)

எ.து. அந்தத்திவசம் போயின. பிற்றைஞான்று பொருள் கொள் என்ற பிராமணனும் பொருள் என்னதே என்றான்.

பூமி கொடுத்த பிராமணனும் பொருள் என்னதே என்றான். இப்படி இவர்கள் யக்கியம் கேட்டுத் தன்மன் பயப்பட்டுச் சகாதேவனை நோக்கி யாது சொன்னான்.

*வலிய கொடுக்கினும்பொன் வாங்கா மறையோன்
நிலையழிந்தான் நீணிலத்தின் மீதே—கலிபுகுந்த
† காரணத்தாற் கண்டீரோ வென்றுரைத்துக்
காட்டி, (62)

இவ்வண்ணமே ஆயிற்றென்று யாமினி இராச்சியத்துக்கு இராசாவென்றிருப்பது தன்ம மொன்றல்லவென்று ஸ்ரீ வாசுதேவனைச் சிந்தித்து யாது சொன்னான் உதிட்டிரன்.

மாலவனுந் தன்சோதி காட்டினான் வானுலகில்
காலமும் போய்வந்து கலிபுகுந்தான்—கோலமலர்
ம[1ண்ணு]ளோர் தாமொழிய மாவிந்தம் போமவனுக்
கெண்ணுமோ வென்றா னெடுத்து. 63

---

47-வது ஏடு இல்லை. * ஈற்றடி இல்லை.
† இவ்வடியுமிறுதிக் குறை. 1. மன்றுளோர்-மூ. பாடம்

எ.து. தம்பிமாரை நோக்கித் தன்மபுத்திரன் சொல்லுவான் ஸ்ரீ வாசுதேவன் வைகுண்டத்தே எழுந்தருளினான். நமக்கினி தலைக்கணில்லை கலிபுகுந்தது. நாம் ஐவரும் துரோபதையும் அத்தினபுரம்விட்டு மாவிந்தம் போவேனென்று, ஒருப்பாடு பண்ணினபடி அபிமன்னுவின் குமாரன் பரீக்ஷித்துவை நோக்கி யாது சொன்னான் தன்மபுத்திரன்.

[[2]படி]முழுதும் வந்து பணிகேட்பப் பார்மேல்
முடிசூடி முன்சூழ ஞாலத்—திடிமுரசு
நின்றியம்ப நீரரசு நீகாக்க வென்றுரைத்தான்
வென்றி [[3]முரசு]யர்த்த வேந்து. 64

என்பது, காணி பாலர் பணிகேட்பத் தமனியக் குடைமேல் நிழற்ற என்னைப்போல் இராச்சியம் செய்திருப்பாயா கென்று தன்மபுத்திரன் பணிப்ப பரீக்ஷித்து யாது விண்ணப்பம் செய்தான்.

கருடனவன் காக்குங் கடலுலகம் காப்ப
*திருடிர வியதுவோ வென்னே —அருணன்
† [அராவிற்] றன்மீதுல வும்புவிக ளெண்டிசையே
தீத்தநீண் முடியாச் சொல். 65

எ.து. கருடன் காக்கின்ற புவி எல்லாம் ஒருயிராவிருந்து காக்கவென்றோ பெருமான் எழுந்தருளியிருந்து காத்த விராச்சியத்தை என்னால் இரட்சிக்கப்போமோவென்று பரீட்சித்து விண்ணப்பஞ் செய்யத் தன்மபுத்திரன் அருளிச் செய்தான்.

வாள்விசயன் சேர்க்கு மருளேயிம் மாநிலந்தா
னாளறியா ரில்லை பார்—ஒளிசேர்
மற்றொப்பார் நிலமுழு துங்கா வலனா
வாளாநீ யென்றா னரசு. 66

---

2. பணி-மூ. பாடம். 3. சேர்க்கப்பெற்றது.
* இவ்வடியிருந்தவாறே எழுதப்பெற்றது. † அராவிற் சேர்க்கை

எ.து. பூமியாள உரியார் பிறரில்லை. நீ அருச்சுனன் மகன் அபிமன்யு புத்திரனாகையால் இராச்சியத்தினை நீ ரட்சிக்க வேணுமாதலால் மண்மடந்தை வருந்திடாமலும் நம்முடைய அதிட்டானம் குலையாமலும் நீ துட்டரைச் சங்கரித்துச் செங் கோல் செலுத்தென்று தருமபுத்திரன் அருளிச்செய்ய யாது விண்ணப்பம் செய்தான் பரீட்சித்து.

நரகுலமீது தனில் நல்லமிர்த மாகு
மிரதி பயவா விருந்தும்—வீரப்
படைவேந்தர் தம்மைஎல்லாம் பாரிடைக்கொன்றாண்ட
கொடைவேந்தன் வீமனையே கூறு. 67

எ.து. வீமசேனனுக்கு இராச்சியங்கொடாயாகில் ஸ்ரீவாசு தேவனுக்குச் சாதகனாகிய அர்ச்சுனற்கு இராச்சியம் கொடுப்ப தென்று பின்னும் சொல்லுவான் பரீட்சித்து.

வானவர்தம் கோனுக்காய் மாவலிதான் தேரூரத்
தானவரைக் கொன்ற தனிச்சிலையோன்—ஏன
விருளிற் றொடலு மியல்வரைசூழ் நாடா
பெருமகற்கே நல்காயிப் பேறு. 68

எ. து. இந்த ராச்சியத்தினை அர்ச்சுனற்கே கொடாயாகில் அதிபராக்கிரமராகிய நகுல சகாதேவற்குக் கொடுத்தருள்வாயா கென்று மற்றவனை நோக்கி யாதருளிச் செய்தான் தன்ம புத்திரன்.

மாயன் பணித்தமையால் வாள்விசயன் தன்சிறுவன்
சேயுந் தனக்காக்கித் திண்புவியை—நீயே
முடிசூட்டி வைத்து முரசுயர்த்தோய் நீங்கள்
அடிகூட்ட நம்மருகே யாம். 69

சொல்லக் கேட்டுக் குந்திதேவி யாது சொன்னாள்.

---

51, 52, 53 & 54 இந்நான்கு ஏடுகளும் இல்லை.

அரவுயர்த்தோன் வஞ்சனைக ளன்றுபல நீங்கள்
வரையனைத்து மவன்கான[ம்] நண்ணிப்-பரவுகின்ற
பாரதப்போர் வென்றுகடற் பார்காக்க வெய்தினையே
நேருனக் கின்றார்சொல் நீ. 70

அன்றியும்,

வேந்தர் திறைகொணர வெண்சாமரை இரட்டச்
சாந்தணியும் மென்முலையார் தற்சூழத்—தீந்திகழும்
மன்னவர்கை கூப்ப மணியாசனத் திருந்தான்
என்னது யா[ர்]வேண்டீ ரிது. 71

அன்றியும்,

செம்பொன் மணிமகுடஞ் சூடியகோ வேந்தர்
அம்பொ(ன்) னகரத னுட்புகுந்து—தம்பியர்கள்
சென்றுதிறை கொணரச் செங்கோல் செலுத்தாதே
குன்றிடைநீ யேகுவதோ கூறு. 72

என்றிவ்வகை சொல்லிக் குந்திதேவி தவிப்பத் தன்ம புத்திரன் யாது சொன்னான்.

மன்னுங் குருநாடன் மாதைமன மகிழ்வுற்
றென்னைப் பயந்தெடுக்க வென்றிறைஞ்சி-முன்னம்
கடற்றுவரை நன்னாடன் கட்டுரைத்த தெல்லாம்
எடுத்துரைத்தா னாங்கே இசைந்து. 73

எ.து. மாதாவே நான் மகாவிந்தம் போகின்றது ஸ்ரீ வாசுதேவன் பணியாதலின் நீக்கப்பெறாதென்று விண்ணப்பஞ் செய்யக் குந்திதேவி யாதருளிச் செய்தாள்.

மாதவன்றன் சொல்லை வழுவாத வண்ணத்தால்
மாதவமேற் கொண்டுநீ மன்னவனே—போதியோ
எங்கோவே உன்னை இறையும் பிரிந்திரேன்
வெங்கானம் வருவன் விரைந்து. 74

எ.து. மாதவன் பணித்தருளினன் வழுவாமல் போகா நின்ருலே யான் உன் இருங்கானம் போக்கி இமைப்பொழுதும் தரியேன் யானும் வருவன் எனக்கேட்டு யாது விண்ணப்பஞ் செய்தான் தன்மபுத்திரன்.

செந்தாமரை யடிகள் சேந்துபல பாலுறைப்ப
வெந்தரிருங் கானகத்(து) ஏகுவதில்—பைந்தார்
வாள்விசயன் சேய்க்கு வருமகனைக் கொண்டரசை
ஆளுநீ ரென்றா னவன். 75

எ.து. எம்பெருமாட்டி தேவரீர்க்கு மகாவிந்தம் போவதரிது. அபிமன்யுவின் புத்திரன் பரீட்சித்து இராச்சியம் பண்ணுவித்துக் கொண்டிங்கே எழுந்தருளி இருக்கவேண்டுவன் சீர்பாதங்கள் கானிடை நடக்கவல்லதோவென்று தன்மபுத்திரன் விண்ணப்பஞ் செய்யக்கேட்டுக் குந்திதேவி யாது சொல்லி யாது செய்தாள்.

*மைந்தரிவர் சொல்லாற்றார்..............................
*(வேந்த)ரிவர்சொல்லாற்றார்..................சிந்தை - (தடு
மாறியே)
இருதலைக் கொள்ளியின் வெள்ளெறும்பே ஒத்தேன்
ஒருதலைக்கு மாற்றா துழன்று. 76

எ.து. மகாவிந்தம் போகவேண்டாமென்பேனாகில்திருமாலவச மழைத்தேனாவேன். அப்போது என்னையும் போகவேண்டா வென்றாள்.

பிள்ளைகளைப் பிரிந்தோரு மாற்றி † ..........பொழுதிருக்கலால் ஆற்றேனென்று தன்சிந்தை ஆகுலஞ்செய்து கண்ணீர் சொரிந்து நின்று யாது சொன்னாள் குந்திதேவி—

---

*இவ்வடிகளின் கடைச்சீரில்லை.
† இங்குள்ள எழுத்துக்கள் விடப்பெற்றிருக்கின்றன.

தன்மனைத் தான் பார்த்து நாராயணன் வசனந்
தன்வசமே தானாகச் சார்ந்தொழுகி—என்மகனே
உன்வசனங் குன்றாமல் உம்பியரோ டேகின்றான்
தன்வசனங் குன்றான் தளர்ந்து. 77

எ.து. கிரேதா யுகத்தின்கண் சக்கரவர்த்தி தன் மகனை காடுறையப்போக்கித் தான் மாண்பெய்தினான். அவனைப் போல் யானுமுங்கள் திண்டோள்களும் செம்முகங்களும், உங்கள் சத்திய வாக்கியங்களும் உங்கள் தைரியங்களும் காணாதே யானுமுயி ரழிகின்றேன்.

நீருந் தம்பிமாரும் மகாவிந்தத்தே நாராயணன் திருவருள் பிழையாதே திருவடி சேர்மின் என்று குந்திதேவி அருளிச் செய்யத் தன்மபுத்திரன் யாது சொன்னான்.

பூபதியைப் பொற்கொடியா டன்னை யுடன்படுத்தி
மாமதிக டன்னையவ் வாய்முறையே—பூபதியைக்
கொண்டுநீ ரிந்தச் சுருபத்தைக் காத்தருள்பின்
எண்டிசையு மென்றா னெடுத்து. 78

இவ்வகை மாதாவுக்கு விண்ணபபஞ் செய்து அவர் பாதமுற வணங்கிப் பின்னை யாது செய்தான் தன்மபுத்திரன்

பூவலய மாண்டு புனையிழையார் தற்சூழக்
காவ[ல]ன்றன் னோடிருந்த காந்தாரி - சேவடிகள்
செந்தாமரைக் கரத்தாற் சென்றுதரு மன்பணிய
வந்தா னவள்பால் மகிழ்ந்து. 79

எ.து. காந்தாரி கோயில் நோக்கிப் போய் ஐவருஞ் சென்று பாதமுற வணங்கிநிற்ப, யாதுசொல்லி வாழ்த்தினாள் காந்தாரி

ஏறாகி எவ்வுலகு மாண்டங் கெதிரன்றி
மாறாத வென்றி மகர்மகளு—....ன்றின்றி
யும்பியரும் நீயு முய்ந்தூழி வாழ்கென்றா[ள்]
அம்பிகைசேர் காந்தாரி ஆங்கு. 80

எ.து. உனக்கெதிர் யாவருமின்றி உன்தம்பிமார் புடை சூழ பாராட்டிறத்து இராசாக்கள் பணிகேட்பத் திருமடந்தை என்றும் பிரியாமே இருந்து இராச்சியபாரம் பண்ணி இனிது ஊழி வாழ்மின் என்று வாழ்த்திப் பின்னும் விசாரித்து யாது சொன்னாள் காந்தாரி.

திருமுகங்கள் வாடிநின் திண்டோளுஞ் செல்வம்
பெருகொளியும் பேணுதலொன் றின்றிக் - குருகுலத்துக்
கோமானே வந்தவாறு கூறென்றா டஞ்சிந்தை
வேமாறு முன்னம் விரைந்து. 81

எ.து. நின் திருமுகம் வாடினவாறும் ஸ்ரீ வாசுதேவன் நிலமையும், எனக்கறியச் சொல்லுவாயாகென்ன யாது சொன்னான் தன்மபுத்திரன்.

கோத்திரரைக் கொன்ற கொடுவினைகள் தான்தீர
யாத்திரைதா னாமாறு மெவ்வாறும்—மாத்திரையில்
வந்தேனடியேன் வரலா றுணர்த்தி இன்றுன்
செந்தாமரை அடிக்கே சேர்ந்து. 82

எ.து. குருக்களையும் என் மித்துரு பாந்தவத்தாரையும் பிராதாக்களையும் கொ[ல்று] பிரமகத்தி தோஷந்தீர எனக்கு தீர்த்த யாத்திரைக்கு விடை தருவாயாகென்று அடிவணங்க யாதுசொன்னாள் காந்தாரி

............ழிக ளெல்லாமிகுத் திடி......ம்
மாறவொரு தன்ம மமையாதோ—வேறுனக்குத்
தீங்காவ து(ண்டா திருமேனி)யிற் றளர்ந்து
போங்கா ரணமேதிப் போது. 83

---

60-வது ஏடு முன்பாதி இல்லை.

உன்மேலுண்டாகிய பழியனைத்து[ம், செய்யத் தன்ம] ங்களிலும், நின் சத்திய வாக்கியத்திலும், பலம்செய வற்றோவென மக்கள் நூற்றுவரையும், மேன்[மை]மி[குந்த தவத்] தாரையும், இழந்து, நீயும் நின் தம்பிமாரும் சுகமே இருந்து இராச்சியத்தினை இரட்சித்துப் போது[கண்டு] உங்கள் செம்முகமே அமையுமென்று யான் மாண்டகாலத்தும், உன் தம்பிமார் பிதா[வுக்கு நடத்துவீ] ராகத் தம் போலே எனக்கு நன்மை செய்ய, நீ உண்டென்று துயரொழிந்து நின்முக[ம் நின் தம்பி] மார் வீமார்ச்சுனர், நகுல சகாதேவர் முகங்களிலும் விழித் திருந்தேன் இனி நின் தம்பிமாரும் [தீர்த்த] யாத்திரை போகில் எனக்குண்டாகக் கிடக்க அற்ப சீவனும் இன்றே ஒழிந்தன்றோ என்று பின்னும் யாதுசொன்னாள் காந்தாரி.

எ.து. சன்மாந்திரத்திலே தன்மஞ் செய்தார்க்குத் தன்மமே கை கொடுக்கும். ஆதலால் இது பூர்வவிதி கண்டாய் என்று பின்னும் யாது சொன்னாள் காந்தாரி.

குந்தியு மாதவனுங் கூறியகொன்[சொல்] மாறாதே
எந்தைநீ மாவிந்தம் ஏகுதியோ—கந்தமலர்ப்
பூந்தாராய் போகுதியோ வென்னாப் புலம்பினாள்
காந்தாரன் பாவை கலந்து. (84)

எ.து. ஸ்ரீ வாசுதேவர் பணியும் குந்தாதேவி பணியுமாறாதே போகின்றாய். அருவினையென் சொல்லைத் தவறியன்றோ என்று தன் செம்மலர்க்கண்ணருவி சோரத் தன்மபுத்திரனுக்கு விடை கொடுத்தாள் காந்தாரி.

அப்பொழுது தம்பிமாருந் தானும் மாதாவை நமஸ்கரித்து மீண்டும் வந்து சபாமண்டபத்திருந்து மந்திரிகள், புரோகிதர், சேனாபதிகள் மற்றுமுள்ள படைத்தலைவர், மண்டபத் தலைவராயுள்ள சாமந்தர்கள் இவ்வனைவர்க்கும் பரீட்சித்துவைக் காட்டிக் கொடுத்து, உச்சியை முகந்து கொண்டு 'கா' அத்தின புரி அரசு [காடத்தின] முறைமை குன்றாதே நடத்துதி என்று சொல்லித் தழுவிக் கொண்டு போகலுற்றபொழுது நகரிசனங்கள் யாது செய்தார்.

மன்னரெழுந்தருள மாநகரியோ ரெல்லோரும்
என்னதாய் வாழ்வோ மெனவிரங்கிப் – பின்னை
அகநோவ வாய்விட் டரற்றினார் தங்கள்
முகமோதி கைசலிக்க முன். 85

அன்றியும்,

மன்ன ரெழுந்தருள மாநகரத் தோரெல்லோரும்
இன்னபடி சொல்வோ மென்னாதே – தன்னுயிரைக்
கூடிருக்கக் காலன் கொடுபோவ தேதுடன்கொண்
டாடலுற்றார் கைதலைமே லாய். 86

அன்றியும்,

அரசுதுறந் தாரணிய மைவருந்தா மேக
அரவண்[ம்]வரைகடல் போலாகி – அரவந்*
தலைசுமந்து மண்ணுளோர் தாம்தா மிரங்கி
நிலையழிந்தார் நெஞ்சத்துள் [†நின்துருகி] நின்று.

அன்றியும்,

அமரலோகத்தில் பண்டு தேவர்கள் அமுதங் கடைந்து ஆலித்தெழுந்த ஆரவாரம்போலப் புலம்பா நின்றது அத்தினபுரம் என்றவாறு. இவ்வகை நகரிசனம் புலம்புதலும், நகரியில் மகா சனங்கள் சோபங்கண்டு பரீட்சித்துவை நோக்கி யாது அருளிச் செய்தான் தன்மபுத்திரன்.

ருருக்கள் குடிமுதலாங் கோவேந்தர்க் கெல்லா(ம்)
இருக்கையிது கண்டாய் என்றும் – பெருக்கத்தாய்
கண்ணாலே மண்ணுயிருங் காதலித்து காத்தளியாய்
மண்ணாளு நீதி மகிழ்ந்து. 88

இவ்வகை பரீட்சித்துக்கு அறிவுணர்த்தி இராச்சியம் கருகாமே, மண்மடந்தை வருந்தாமே இரட்சிக்கிறாயா? என்று சொல்லிப் பின்சென்ற மகா சனங்களையும், மந்திரி, புரோகிதர்

---

*கற்பனைப் பாட்டு.

† இச்சீர் இருந்தவாறு எழுதப்பெற்றது.

சேனாபதி தொடக்கத்தார் மற்றனைவரையும் நோக்கி யாது சொன்னான் தன்மபுத்திரன்.

தங்கள் நினைவெல்லாம் சொல்லி அருள்கின்ற
அங்கவரை எல்லா(ம்) அகமகிழ்ந்து—நீங்கள்
ஏகுமது வேண்டா எழில்நகரி எல்லாரு
போகுமின்க ளென்றார் புரிந்து. 89

இவ்வகை நகரிசனங்களுக்கு விடைகொடுத்து பரீட்சித்துவை அணைத்துக்கொண்டு, [நா]டிக்கொள்ளத் தன்மபுத்திரன் சொல்லுவான்: மாசின்றி மச்ச, கூர்ம, வராக, நரசிங்க, வாமன, [1]ராமோ, [2]ராமச்ச, [3]ராமச்சவிட்டுணுவாய் அவதாரம் பண்ணி அருளிய ஸ்ரீ மாதவனுடையஸ்ரீ வைகுண்டமல்லது அறிவதில்லை. ஸ்ரீ வைகுண்டத்துக்குச் செல்ல நெறிகாட்டுமெனவுரைத்து அவர்களும், எங்களால் அறியப்பட்டது நீங்கள் வடக்கு நோக்கி வழிகொண்டு போமின் எனப், பாண்டவர்கள் யாது செய்தார்,

நெய்தற் றடமும் நெடுவயல்சூழ் நன்னாடு
மெய்தற்கரி தென்னவு மெய்தினார்—கொய்தமலர்
மாக்கங்கை சூடும் வளநா[ட்]டவுன்றன்னருளால்
கோக்கங்கை தானிழிந்த குன்று. 90

எ.து. அனாதிகாலம் தவம் பண்ணி அசுவமேதம் பண்ணியும் விப்பிரதானம் பண்ணியும் எய்தற்கரிய வரை இடங்களும், நீந்தற்கரிய மாலியாறும் கடந்து சத்த விருடிகளால் மிதிக்கப் பட்ட திரிசூலபர்வதம் சார்ந்தாராகக் கருதுவது. அப்பொழுது ஆதித்திய பகவானும் யாது செய்தான்.

ஏழ்பொழிலு மேழ்பகலு மேழ்பரித் தேரோட்டிச்
சூழவருஞ் சூரியனு மோடித்—தாழ்கடலுள்
காரிருளைக் காட்டிக் கடிதுடனே போய்வீழ்ந்தான்.
கூரிருளை மேற்போர்த்துக் கொண்டு. 91

---

64-வது ஏடு இல்லை.
1. பரசுராமன், 2. தசரத ராமன், 3 பலராமன்.

எ.து. ஆதித்தனும் அத்தமன பர்வதஞ் சார்ந்தான். பாண்டவருந் துரோபதையும், திரிசூல பருவதஞ்சாருமளவில் ஆதித்தனும் நல்லிருள்படாமல் போர்ப்ப, இந்த நல்லிருள் யாமத்துச் சந்திரனும் வந்து தோன்ற, ஐவரும் ஒரு பளிங்குப் பாறையில் இருந்தபொழுது நித்திரைவராமல் ஒருவரை ஒருவர் முகநோக்கித் தங்கள் இராச்சியம் பல சொல்லுவது கேட்டுத், தன்மபுத்திரன் வீமசேனனை நோக்கி யாது சொன்னான்.

*நன்றியது பயக்கு ஞாலமது தன்னை
இன்றிவந்தே நீர்வளன்றுயர மெய்தாதே—நன்றறியாப்
பாலகனைப் பாராள வைத்தோம் பணித்தாங்கே
(காலமதை உணர்ந்தே தான்.) 92

வீமசேனனே போய் இராச்சியத்தினை இரட்சிப்பாயா கென்ன யாது சொன்னான் வீமசேனன்.

*எம்பெருமா னேகு மிடமே எனக்காக
வம்பவிழும் கானே வளநாடு - எம்பெருமான்
உம்பியர்க ளோடேகீர், 93

இவர்களும், இப்பரிசே விண்ணப்பஞ் செய்யத் துரோபதையை நோக்கி யாது அருளிச் செய்தான் தன்மபுத்திரன்

பாலைநிலமும் படர் காடும் பாறைகளும்
சேலுகளு மாறுந் திரியாதே—ஞாலத்துத்
தேக்குருதிச் சேயலைக்கும் சீர்கொளுவும் நன்னாட்டி[ல்]
மாக்குந்திபா லிருப்பாய் வாழ்ந்து. 94

என்பது, இன்னமும் பல தீர்த்தங்களும் ஆடக்கடவோம் எங்களுடனே இந்த அருங்கானகமுங் குன்றுகளும் மால்யாறுங் கடந்து உழலவேண்டா நீ போய் அத்தினபுரம் புகுந்து குந்தா தேவியுடனே சுகித்திருப்பாய், ஆங்கென்ன யாது சொன்னாள் துரோபதை,

---

67-வது ஏடு இல்லை.

*ஈற்றடி சேர்க்கை. † 3-வது அடி குறை. 4-வது அடி இல்லை.

கொல்லைவாகு கொழித் தன்னை சொற்கேட்டுச்
செல்வஞ் சிறிதாய்ச் சிறந்தாலும்—சொல்லுங்காற்
றன்கணவன் சோறே தனக்கமுத மாதலால்
புன்கண்மை எய்துவரோ போய். 95

என்று இவ்வகை சொல்லிப் பின்னும் யாது சொன்னாள் துரோபதை,

எ.து.

ஐவீருஞ் சேரு மருஞ்சுரமே யன்னகரி
ஐவீரும் சொன்னதே யாமெனக்கு—வையகத்தோ
ரேசும்படியோ விருப்பே னிருநிலத்தார்
பேசும்படி இருப்பேன் பின். 96

எ.து. ஐவீரும் புக்கரு நகரியே எனக்கு நகரி, ஐவீரும் புக்க சுவர்க்கமே எனக்குச் சுவர்க்கம், ஐவீரும் புக்க கானகமே எனக்குக் கானகம், என்று பின்னும் கலிபுகுந்த காலத்து நீங்கள் இராச்சியந் துறந்து மகாவிந்தம் போக, யான் கன்ம பூமி போகேன் என்று துரோபதை சொல்லிப் பின்னும் யாது செய்தாள்.

வெள்ளைநிறச் சங்கார்ப்ப வெண்டா மரைகண்மேல்
துள்ளிவரால் பாயுந் துறையன்ன—புள்ளிருந்தே
மாங்கனிகள் கீறும் வளநா டொழிந்தைவர்
போங்கான லென்காலுக் கோர்பூ. 97

நீங்கள் ஐவீரும் *ஒட்டச் சூதாடி உறைந்த கானகத்திலே பன்னீராண்டு கரந்துறைந்து ஓராண்டுங் கூடி அனுபவித்தேன். சுவர்க்கபதிகளாக நீங்கள் அழகிய இராச்சியங்களை விட்டுப் போகையால் என்னைக் கன்மலோகத்திலே போயிருக்கப் பணிப்பது,

தன்மமோ என்று துரோபதை சொல்லி நிற்ப வீமார்ச்சுனர் நகுல சகாதேவர் யாது விண்ணப்பஞ் செய்தார்.

---

[என்னை] சேர்க்கை.

* ஒட்டம்—பந்தயப்பொருள்.

எம்பெருமான் எங்கட் கிசைந்தருளுங் குற்றேவல் ஏவியவர் செய்தால். இன்று எம்பெருமான் இராச்சியம் பண்ணுகிறது.

நாம் மகாவிந்தம் போமளவிலிங்கு குற்றேவல் செய்ய அடியோங்கள் வேண்டாதே, வாவென்று விண்ணப்பஞ் செய்யுமளவில் ஆதித்தன் யாது செய்தான்.

சூரிய உதய வருணனை

மேற்கடலிற் றான்குளிக்க வெய்யோன் விரைந்துபோய்
கார்க்கடலின் கீழ்பாற் கதிர்விட்டான்—பூக்கமல[ம்]
வண்டிரைப்ப மாமலர்கள் வாய்திறப்ப மண்ணுலக
மெண்டிசையு நீங்கிற் றிருள். (98)

இவ்வகை ஆதித்திய பகவான் உதயஞ் செய்யப் பாண்டவருந் துரோபதையும் பர்வதங்களில் உள்ள தீர்த்தங்களையாடிப் பின்னும் யாது செய்தார்.

சங்கரன் றன்சடையி னின்றும்போய்த் தாழக்
கங்கைவழிந் திழிந்தவாரி மடுக்கண்டு—பொங்கு
புனலிடையே யாடிப் பொருப்பிடையே போயினார்
கனவரை யோர்க்கடிகண் டாங்கு. (99)

இவ்வகை தேவேந்திரனுடைய கங்கைமடுக் கண்டு தீர்த்தமாடி ஸ்ரீ கைலாச வாசியை நமஸ்கரித்து,

"முகவன்பாற் சென்றடிபணிந் தாற்றாம லாங்கு"

எ.து. பாண்டவருந் துரோபதையும் பர்வதத்தின் பக்கத்தில் அரிய தாபத்துடனே ஆற்றாது வந்து கணபதிகோயில் கண்டு தம்பிமாரை நோக்கி யாது (சொன்னான்) தன்மபுத்திரன்

தெய்வ மிதனைநாம் சிந்தித்துக் கைதொழுது
ஐய மறவழிகண் டாற்றலா— மெய்யே
.........மலான் பாலே தாம் பணிந்தால்
ஓங்குநெறி காணலா மென்று. (100)

---

71, 72 ஏடுகள் இல்லை.

எ.து. விக்கினேசுரன் நம்மை எல்லாமவனைத் தோத்திரஞ் செய்து வணங்கினால் நமக்கு, நெறிகண்டு இளைப்பாறிப் போகலாமென்றுமவனை ஐவரும் சென்று யாது சொல்லித் துதித்தாரோவெனில்

சீராருந் திருமடந்தை..............
சடையாற்கு நேரிழையாளு (வந்தளித்தகரி]முகவா
கணபதியே உனக்கப யம். (101)

அன்றியும்,

வஞ்சமுலைப் பேயி னுயிருண்டு மருதிடந்து
நஞ்சரவத் தாழ்கடலிற் றான்துயின்றும்—நஞ்சரவி
னடம் பயின்று நந்தன்மனை வளர்ந்துங்
கஞ்சனைக் (காய்ந்த)பதியே உனக்கப யம். (102)

அன்றியும்,

மறப்பதன்றி எப்பொழுது மதுதும்பை பலகொண்டு
சிறப்புக்கள் சிந்தனையாற் செய்வோமைப் பிறைதும்பை
அரவினொடு பெரும்புனலுஞ் சடைக்கணிவோன்
திருமகனே கணபதியே உனக் கபயம். (103)

அன்றியும்,

ஆரமிக வெடுத்தணைத்து அன்னையென்றும் பேச்சி
(கோர)முலைவாய் வைத்துண்ட கொடுங்குழவி தன் (மருகா
பாரொழிந்து பஞ்சவரோ பாஞ்சாலி யோடும்வந்தோம்
(தேருநெ)றி ஈதென்னாக் கணபதியே உனக்கபயம்.
(104)

என்றிவ்வகை பாண்டவர்கள் துதி செய்ய மற்றவர் சுவர்க்கத் திருட்டியனாய் அவர்களுக்கு முன்னின்றருளி விக்கினேசுரன் யாது அருளிச் செய்தான்.

கணவன் [முதலைவருமே] கானகமெல் லாம்போய்
எனைஅளவு மெய்தநீர் வேண்டா—மனையவற்கு
இன்புறற் றிண்சுவாமி யானவ் விடத்தே
துன்புற் றிடர்தீர்ந் திரு[நீர்சூழ்ந்து]. (105)

எ.து. நீங்கள் ஆரணிய வாசிகளாய் மலையினும், கானிலும் உழலவேண்டாம் நாம் ஐந்துபேர்க்கும் பரம சுவர்க்கமாகப் பூசிக்கத்தக்கதாகத் தருவோம். நீர் எங்கும் போகாதே இனி திருப்பீராமின் என்று விக்கினேசுரன் அருளிச்செய்யத் தன்ம புத்திரன் யாது விண்ணப்பம் செய்தான்.

கலிபுகுந்த காரணமே கார்வண்ணன் கழிந்தான்போ
யரசுகை விட்டோம் போந்தோம் வலக்கையர
விந்தத் தடவரையை யாங்கள் கடிது
வரவருள்வா யாக கடிது. (106)

எ.து. துவாபரயுக மொழிந்து நீங்கிக் கலிபுகுந்ததென்று ஸ்ரீ வாசுதேவர் பா ர் து ற ந் து வைகுண்டத்து எழுந்தருளினார். அடியோங்களும் ஸ்ரீ நாராயணன் பணித்தருளின வரம்பிழையாதே மகாவிந்தம் போகப்புறப்பட்டோம்.

பூலோகத்துப் பஞ்சபாண்டவராகின்றோம் யாங்கள் கலி புகுந்தவாறே எங்கள் அரசு துறந்து இராச்சியம்விட்டு மகாவிந்தம் போக விடை கொண்டுவந்தோம்.

நின் திருமலையிலே அனேகந் திறக்கப்பட்டு வழிகாணாது உழன்று திரிகின்றோம். எமக்கு இந்த வரைகடந்து போகப் பிரசாதித்தருள்வாயாகென்ன, விக்கினேசுரனுக்கு அ தி ட் ட [த்துட்ட]னாய நீங்கள் வடக்கு நோக்கி இம்மலை கடந்து போமின் என்று நெறிகாட்டி ஆச்சரியமாயினான்.

அப்பொழுது பாண்டவருந் துரோபதையும் யாது செய்தார்

கரிமுகவன் தன்னருளாற் கார்வரையை நீந்தி
அரியவன மெல்லாம்விட் டங்கோர்—பெரியதொரு
தேயத்தின் மிக்க திருக்கடையி னுட்புகுந்தார்
காத்திருந்தார் தெய்வக் கடை. (107)

எ.து. இமயகிரி பர்வதத்தைக் கடந்து சுரோணிதமென்னும் பர்வதத்தின் மேலே எழுந்தருளி இருந்த அபிஷேக பாலன் கோயில்கண்டு ஐவருஞ் சென்று துதிசெய்து வலமாக வந்து அபிஷேகபாலனும் பிரத்யக்ஷமாக உங்களுக்கு வேண்டும் வரம் என் பக்கலில் வாங்கிக்கொள்ளும் என்னப் பாண்டவரும், தம்பிரானே எங்களுக்கு வரமாவது, ஸ்ரீ நாராயணன் ஸ்ரீபாதங்களைக் காண்கிறதே கண்டாய். எங்களுக்கு வரமென்னும்அபிஷேக பாலனும் மிகப் பிரியனாய் "சுரோத்தகிரி பர்வதத்தை" அடைந்து வழி காட்ட அனுக்கிரகம் செய்தருளினான்.

அப்பொழுது பஞ்சபாண்டவர்களும் வடக்கு நோக்கிப்போய் காலபர்வதத்தைக் கண்டு வானவர் உறையும் பருவதமிது காணுமென்று தன்மபுத்திரன் கூறவும் பருவதத்தின் மீதேறி அங்குள்ள தீர்த்தங்களையும் ஆடிப்போகப் பின்னை யாது கண்டார் பாண்டவர்கள்

எண்ணான்கு யோசனையி னீளமக லத்தால்
எண்ணான்கு சூழுமியல் புடைத்தாய்—கண்ணினாற்
காண்பார் தமக்கினிதாய்க் காட்சியினாற் காட்டிற்றே
மண்பாலு மாநகரந் தான். (108)

எ.து. காந்தருவ ராசன் நகரி எண்ணான்கு யோசனை உடைத்தாகிய நீளமும் அகலமும்,

த், தென்கொ லோவிண்ணடைய....................
அற்றனர்கொ லெண்ணாங் கொருநொடியின் வந்தார்
அற்றமது கொதிப்பா னாங்கு. (109)

எ.து. மேகராசன் என்னும் நகரத் துவரதராசன், பாண்டவரும் துரோபதையும் கண்டு இவர்கள் பூமியில் வாழும் மனிதர், தேவர்கள் வாழும் கோநகரத்துக்கு வந்தார்கள். இவர்களை நாம் சென்றறிய வேணுமென்றும், கதுமென எதிரே வந்து யாது சொன்னான் மேகநாதன்

---

78-வது ஏடு இல்லை.

பாண்டவருஞ் சென்று பனிவரையி னன்னெறிகண்
டிண்டின்வருவா ரெதிர் [3]விளங்கி—([1]யாண்டுபல)
மந்திரங்க ளொத்த மதியாலே வந்தணைந்தார்
[2]செங்கதி(ரோன்) முன்னினத்தே தான். (110)

இவ்வகை மேகநாதன் சொல்லத் தன்மபுத்திரன் யாது சொன்னான்.

[5]எஞ்சா தெதிர்[4] விளங்கி எம்மை வினவுதியோ
பஞ்சவரோ நாங்கள் பகருங்கால்—அஞ்சவரு
நாடிந்த அவனி யெல்லாம். (111)

செய்யத் தொடங்க வேணுமென்ற அறுதிகாலமுன்னல் தேடித் திரிகின்றேன். யுத்தத்துக்கு ஐவீரும் ஒருப்படுவீரா மென்று மேகநாதன் பரீட்சித்துக்குச் சொல்லுவது கேட்டு யாது சொன்னான் தன்மபுத்திரன்.

அரசுதுறந் தாரணியம் ஐவோரும் போந்தங்
கொருவரையுங் கொல்லா துயர்விரதம்—பெரி
(துடையோம்
பேணமை யானீ பிறிதொன்று சொல்லிடினுங்
கோணமை எங்கள் குணம். (112)

எ. து. அரசு துறந்து இவ்வடிவுகொண்டு போந்தோம் நாங்கள் கொண்ட விரதத்தால் இப்பொழுது நெறிகளோடு போம் எம்மை எல்லாரும் சேயின் உடன்பட்டோமென்று தன்மபுத்திரன் சொல்லி வீமசேனனை நோக்கி யாது சொன்னான் மேகநாதன்.

தருமந்தா னிற்கத் தடுத்தாண்ட மைமிக்க
குருபதியைக் கூர்வயிரத் தண்டால்—திருகியொரு
நூற்றுவரைக் கொன்றுய் நொடிவரையி லென்னேடு
போர்க்குறிமி னென்றுன் புகன்று. (113)

---

80-வது ஏடு இல்லை. 1,2 சேர்க்கை. 3,4 விளங்கி—மூலபாடம்
5. குறைப்பாட்டு

இவ்வகை மேகநாதன் கூறக் கேட்டு வீமசேனன் யாது சொன்னான்.

மேகநாதன் சொல்ல விடம்போல விறல்வீமன்
ஆகத்துப் பட்டாங் கழுந்தாமுன்—மேகத்
தத்திங்கள் வெண்குடையான் தன்னருளா னேக்க
†முத்திங்க ளாகு முகம். (114)

எ.து. மேகநாதன் சொல்லிய சொற்கேட்டு நெருப்பெழ விழித்தும், அங்கு நின்றதோர் வடவிருக்ஷத்தைப்பற்றிநோக்க தன்மபுத்திரன் [*தூரதிருட்டியினால்] நோக்குதலும் அப்பொழுது யாது நிகழ்ந்ததோ, எனில்,

பாம்பைக் கருடன் படஞ்(சு)ருக்கினாற் போலக்
காம்பணைத் தோள்வீமன் தன்னைத்—தேம்ப
நயனத்தால் நோக்க நறும்பாதம் பாத்து
வயனத்தால் மாநிலத்தான் மற்று. (115)

எ.து. ஸ்ரீ வைகுந்ததேவன் மாநாகத்தைப் படஞ்சுருக் கினாற்போல வீமசேனன் கோபாக்கினியைத் தன்மபுத்திரன் நயனமாகிய சொல்லால் தணிந்தான் என்றவாறு.

அப்பொழுது மேகநாதனை நோக்கி வீமசேனன் யாது சொன்னான்.

குருக்கள் குடிப்பிறந்தார் கொண்ட விரதம்
நெருக்கிடினும் நின்னொப்பார் வந்து—செருக்கிடினும்
(சீ)றுவதொன் றில்லையால் தேர்வேந்தே எம்பெருமான்
கூறுவதே எங்கள் குணம். (116)

எ.து. யாதே யாயினும் எங்கள் வம்சத்தார் கொண்ட விரதம், நின்போலார் வந்து [நெருக்கிடினும்] மீதூர்வதில்லை. எம்பெருமான் தன்மபுத்திரன் பிரசாதமல்லது மற்றொன்றுங் கடவோம் அல்லவென்று வீமசேனன் சொல்லக்கேட்டு அருச் சுனனை நோக்கி யாது சொன்னான் மேகநாதன்.

*ரோஷதிருட்டினால் மூ. பாடம். † முத்தினங்கள்-சுவடி

விண்ணவற்காய்த் தானவரை றென்றடர்த்த வேல்
(விசயன்
ம(ண்ணக)த்து மாபாரதம் பொருதாய்-கண்ணகத்து
மைத்துனனே மாலுமக்கு வந்தொருகால் வரமருள
வித்தகத்தை என்மேல் விடு. (117)

எ.து தேவராசனுக்கு மகனாகிய இரணியபுர வாசிகனைக் கொன்றாய். நீ என் பழம் பகைஞன் ஆதலால், நாராயண மூர்த்தி நிற்கையால் நான் மெய்தூரமாட்டாதிருந்தேன். நான் இன்றுஉன்னை ஏகாந்தத்துக் கண்டேன். என்னோடு யுத்தம் செய்தியோ என்றும், யுத்தம் செய்யாயாகில் உன்னைப் பிடித்துக் கொன்றுவிடுவேன் என்றும், மேகநாதன் கூறக்கேட்டு அர்ச்சுனன் யாது சொன்னான்.

நேர்ந்த சிலையழியா நின்னைப் போலாகாது
கூச்சமை செய்யார் குருகுலத்தார்—வாயினாற்
பேணித்தருமன் பெயர்த்தொன் றருளுமேல்
காணத் தகுமென் கருத்து. (118)

யுத்தம் செய்யாமைக்கு விரோதங் கொண்டேன் ஆயினும் உன்பொருட்டுத் தன்மபுத்திரன் பிரசாதம் பெறில் நீ சொல்லுகிற சேவகம் அறிந்து விட்டொழிந்தேன் என்று,

கூறிகளை, அவமதித்துக் கூறினேன் ஆதலால் என்னோடு நின்று அமர் செய்ய அஞ்சினார்கள். நீ ஆகிலும் நின் சேவகத்தைக் காட்டுதி என்று மேகநாதன் கூறக்கேட்டு யாது சொன்னான் நகுலன்

தங்கள்பணி நோக்கி தானவன்சொல் நோக்கி
வெங்கோபந் தன்னை விட்டொழிந்து—கங்கைத்
திரைபார்த்துப் போய்வசனம் சொல்லைக் குருநாட
னுரைசுருங்கு தென்றா னுணர்ந்து. (119)

---

85-வது ஏடு இல்லை.

எ.து. மேகநாதன் கூறிய சொற்கேட்டு எழுந்த கோபாக்கினியைத் தன்மபுத்திரனென்னும் கிருபாசமுத்திரத்தாற்றணிந்து நகுலன் ஒன்றை உரையாதே நிற்ப சகாதேவனை நோக்கி யாது சொன்னான் மேகநாதன்.

கருவேந்தி மேகங் கருவரைமேற்பெய்ய
மருவேந்திச் சென்று மண்டுங்—குருவேந்தா
கோக்குமரா நீதான் குறித்தொருகால் வாளமருட்
டாக்குதியோ வென்றான் சமைந்து (120)

எ.து. யாவரும் தேவாசுரர் என்னுடனே யுத்தம் செய்து வென்றுரில்லை பண்டொரு காலத்துத் தேர்வே.........
அன்றியும்;

ஐவீருங் காக்கின்ற ஆரமுதமாங் கதனை
கையாலே தீண்டிக் கருங்காகம்—மெய்யதனைத்
தீண்டுமோ வென்றமுதாள் தீயவினை தீண்டும்
பாண்டவர்க ளென்றுள்பணிந்து. (121)

எ.து. ஐவரும் அருந்துகின்ற ஆரமுதத்தினை ஒரு காகம் அருந்தக் கண்டுநிற்பதோ என்று துரோபதை பிரலாபியா நின்றவிடத்து தன்மபுத்திரனை நோக்கி யாது சொன்னான் வீமசேனன்.

தருமன்முக நோக்கித் தம்பியரை நோக்கி
உருமதிர வுற்றெழுந்தங் கோடி—செருமனத்தால்
மாமலையின் மீதேறி யொருமரத்தை வாங்கினான்
[*காமர்]தோள் வீமன் கருத்து. (122)

எ.து. தன்மபுத்திரனை நமஸ்கரித்துத் தம்பிமாரைக் கடைக்கணித்து ஒரு வடவிருக்ஷத்தைக் கிழித்துக்கொண்டு வடவாமுகாக்கினிபோல் மேகநாதனை அடர்ந்து சென்றழித்துப் பின் யாது செய்தான் வீமசேனன்.

---

87 & 88-வது ஏடுகள் இல்லை. *காமருவு—மூலபாடம்.

பொருப்பு நெருப்பெழ வகிர்த்துப் பொங்கி அச்சுதனை, ஆதிவராகனனை, அநந்தசயனனை, பரந்தாமனை, பரஞ்சுடரை, ஸ்ரீதரனை, தங்கள் சிந்தையுள்ளே வைத்து கோமேதகமென்னும் பருவதத்தைச் சென்று எய்தி அதன் மேலுள்ள தீர்த்தங்களையும் விரும்பி ஆடியதில் வாழ்கின்ற இருடிகளைக்கண்டு நமஸ்கரித்து அங்கு நின்றும்போந்து வடக்கு நோக்கிச் செல்லா நின்றார் குருகுல வேந்தர் என்றவாறு

கார்மேக வண்ணன் கழலிணைதான் சிந்தித்துக்
கார்மேக வேனங் கனவரைவாய்ச்—சார்மேவும்
பன்னரிய காதம் பலவுஞ்சென் றெய்தினார்
மின்னரிபோல் வேலார் விரைந்து. (123)

இவ்வகை பல மால்வரைகளும் பல தீர்த்தங்களும் ஆடிப் பற்பமராமென்னும் பர்வதத்தையே நிதம் தேவர்கள் விரும்பி ஆடும் தீர்த்தங்களைத் தாங்களும் விரும்பி ஆடி அதன் மேலுள்ள அஷ்டத விருட்சங்களைக் கோர்[வை] பொன்னோடு இரும்பையும் போதலால் மின்னிடையைக் கொண்டுபோவான் றன்னைக் கொல்லாமல் காப்பவனுக்கு வீரனைக் கொல்வதோ விடுவதோ என்று தன்மபுத்திரனை நோக்கி அர்ச்சுனன் சொல்ல யாது சொன்னான் வீமசேனன்.

நிருபதிகள் நின்னொப்பார் நீணிலத்தி லுண்டோ
நரபதிகள் நாடுங்கா னண்ணித்—துருபதையைக்
கொண்டேகக் கண்டுநின்ற கோமானே நின்னை
[யொப்பார்
உண்டோ வுலகத்தி னுள். (124)

எ.து. நரபதிகள் நின்னோடு ஒப்பார் நானிலத்திலர் என்று அருச்சுனனைத் துதித்துச் சொல்லித் துரோபதையுங் கொண்டு சித்தர் ஆசிரமம் புகுந்தார் பாண்டவர்கள், என்றவாறு.

மேகநாதன் யுத்தமுடிந்து முற்றும், இவ்வகை கந்தர்வர் களை விட்டு, அங்கு நின்றும் துரோபதையுடன் கொண்டு பஞ்சபாண்டவர்கள் யாது செய்தார்.

நெறியி னெடுமரங்கள் நின்றுதழை கின்றீர்
வெறிகொள்ளும் வெந்தழலே வீசச்—செறிகொள்
கொடிப்பவளந் துன்னிய குன்றிடையே நின்றார்
அடிப்பவளம் போற்சிறப்ப வாங்கு. (125)

எ.து. அங்கு நின்றும் போந்து பவளம் என்னும் பர்வதம் சார்ந்தார். அப்பொழுது அந்தப் பர்வதத்தின் கிரணங்களையும் கண்டதன் மேலுள்ள தீர்த்தங்களை விரும்பியாடி, அங்கு நின்றும் வடக்கு நோக்கிப் போயினார் பாண்டவர்கள் என்றவாறு.

சாகரங்க ளேயுகந்து தண்ணீர்கை யாற்குடித்து
ஆகமங்க ளோதி அறிவறிந்து—வேகத்தால்
நீலநெடு வரைமேல் மேவினார் நீணிலத்தில்
கோலநெடுந் தேவியுடன் கொண்டு. (126)

எ.து. சாகரமே ஆகாரமாகக்கொண்டு தண்ணீர் பருகி வெங்கதிர்க் கிரணங்களால் வேவப்பெற்று விருட்சங்களெல்லாம் வற்றிக்கிடக்கின்ற கானகத்தூடே பாதங்களிலே பரலுறைப்பச் சென்று நீலமென்னும் பர்வதத்தைக் கண்டு அதன்மேலுள்ள தீர்த்தங்களில் விரும்பியாடி அதனையுங் கடந்து வடக்கு நோக்கிப் போயினார் பாண்டவர்கள், என்றவாறு.

...... யுங்கண்டு அங்கு நின்றும் வடக்கு நோக்கிப் போயினார் பாண்டவர்கள் என்றவாறு.

மாதவனைக் கேசவனை வாராழி மாயவனைச்
சீதரனைச் சிந்தையுற நினைந்து—*போதித்துப்
புள்ளினங்கள் வந்துறையும் புட்கரணி நண்ணினார்
தன்னினங்கள் தாரார் கடிது. (127)

இவ்வகை பல யோசனைகளெல்லாம் கடந்து சென்று ஐவரும் காணாமல் தாய் போய் மகளைச் சென்றெய்தி புட்கரணியின் பொலிவு எவ்வகையோ எனில்,

---

93-வது ஏடு இல்லை. *போதிற்று மூ. பாடம்.

கரும்புங் கதலியும் காற்கமுகும் தெங்கும்
நெருங்கும் பலாமரமு நீடி—மருங்கெழுந்த
மாதளையு மல்லிகையும் வாய்த்தமலர்த் தேன்
[சொரியும்
போதுகளும் பொய்கைப் புனல். (128)

அன்றியும்,

புண்டரீகப் பொய்கைப் புனல்ததும்பப் பொய்கைஎலாம்
கண்டியம்பப் புள்ளினங்கள் காளைவரால்—வண்டலரும்
செந்தாமரையே தலைக்*கணியச் சேர்ந் திலங்கும்
பைந்தாமரை மலரே ஆங்கு. (129)

அன்றியும்,

நாரத்தை புன்னை நறுங்கொதுகு நன்செருந்தி
கார்வந்து சேருங் கனவரைமே—லாயிரஞ்சேர்
சந்தனமு மஞ்சனமுந் தான்மறந்து காட்டிற்றே
அந்தமருஞ் சோலை மருங்கு. (130)

அன்றியும்,

கோகுலங்கள் பாடக் குதலைவாய் கொஞ்சுகிளி
ஆகமங்க(ள்) ஓதி அருவரைவாய்த்—தோகை
மயிலினங்கள் கூத்தாட வான்கடுக்கை பொன்னே
வியலுளதென் றீயு மிடம். (131)

எ.து. இப்பிரகாரங்களை உடைத்தாகிய புட்கரணியைக் கண்டு அதன்கண்ணே சத்திவிருடி என்னும் பேருடையான் இராசவிருடி தவசு பண்ணினவனைக் கண்டு பாண்டவருஞ் சென்று அவர் பாதம் நமஸ்காரம் செய்து நிற்குமளவில் ஆதித்திய பகவான் யாது அருளிச் செய்தான்.

அருணனவ னன்றேக ஆதித்த னாங்கே
வருணன் திசைநோக்கி வந்து—தரணியோர்க்
கந்திப் பொழுதாக வாழ்கடலில் மூழ்கிடுகச்
சந்திரனுந் தோன்றினான் தான். (132)

---

*தலைக்கணைய—மூ. பாடம்.

ஆதித்திய பகவானும் அத்தமன பர்வதம் சார்ந்தான். அவ்வெல்லையில் சந்திர பகவானும் வந்து தோன்ற ஐவரும் துரோபதையும் இராசரிஷி யருகே நின்றார். அப்பொழுது இருடியும் சில புராணங்களை உரைத்து, இருக்குமளவில் தன்மபுத்திரனை நோக்கி இராசரிஷி யாது சொன்னான்.

மன்னவா மாமுனியே வந்தபடி யேதென்ன
மன்னவனு மாமுனிக்குவந்த வகைசொல்லி—மன்னவனும்
அன்னங்கள் மேவு மணிமா மலர்ப்பொய்கை
தன்னைவின வென்றான் தான். (133)

எ.து. தன்மபுத்திரனை இருடி பார்த்து நீங்கள் போந்தது ஏதென்ருன். நாங்கள் பாண்டுவின் புத்திரராம், தன்மபுத்திரர், வீமார்ச்சுனர், நகுல சகாதேவர் துரோபதையாகின்றோம். யாங்கள் துவாபர யுகம் நீங்கி கலி புகுந்தவாறே இராச்சியந் துறந்து மகாவிந்தம் போவது பொருட்டாக ஸ்ரீ வாசுதேவன் பணியாற் புறப்பட்டோமென்று, தன்மபுத்திரன் சொல்ல இருடி யாது சொன்னான்.

மேகம் பொழிந்த வியன்சார விற்பொய்கை
ஆகுமிது தன்னி லழகாக—நாக
கன்னியர்கள் வந்து கலந்தாடுந் தீர்த்தமிது
மன்னவனே என்றான் மகிழ்ந்து. (134)

நாக கன்னியர்கள் ஐம்பதினாயிரர் வந்து தினந்தோறும் தீர்த்தபானம் பண்ணிப்போகிற புண்ணிய தீர்த்தமாகியது மகா தீர்த்தங் கண்டாய். நாகலோகத்தின்கண் நின்றும் வந்து தரணியைக்குறுகி ஆடையும் ஆபரணங்களும் களைந்து தீர்த்தமாடிப் பழந்துகிலுடுத்துப் புனை இழை புனைந்து மகா இருடிக்குத் தானஞ்செய்து, தாங்கள் இனிது பேசிநின்ற நாக கன்னியரைப் பஞ்சபாண்டவர்களுக்குக் காட்டி, மற்றவர்களும் கன்னியர்களைக்கண்டு காட்சிசெய்து நிற்குமளவில், கன்னியர் களுக்குப் பாண்டவர்களைக் காட்டி இவர்கள் சிலர் மாண்டவர் போலிருந்ததெனத் தங்களிலே பேசி அடுத்து நின்று சொல்லி யாது செய்தார்.

மண்ணிற் பிறந்த மனிதர் வரவரிதாம்
நண்ணாத் தகுவரோ நற்பொய்கை – நண்ணினுங்
கேட்டறியோ மென்று கிளிமொழியா ரெல்லாரும்
வாட்டமின்றி எய்தினார் வந்து. (135)

இந்தப் புட்கரணியின்கண் மாண்டவர் யாவரும் வரவு அரிது, இவர்கள் இராக்கதரோ, க்ஷத்திரியரோ, வித்தியாதரரோ, மனிதரோ என்று அறிந்து போவோம் என்று அவர்கள் மாடெய்தி நின்று யாது சொன்னார் கன்னியர்கள்

எந்நாட்டு மன்னவரே நும்மூரேது பேரேது
இந்நாட்டி னீர்வந்த காரணமென்—மன்னாட்டி
எட்டனையும் குன்ரு தெடுத்துரைமி னென்றுரைத்தார்
மட்டவிழும் பூங்குழலார் வந்து. (136)

எ.து. நீங்கள் யாரோ நும் ஊர் எது பேர் சொல்லுமின், இந்த மாதர் யாரென்று கன்னியர்கள் வினவத் தன்மபுத்திரன் யாது சொன்னான்.

ஏந்திழையீ ரெம்மை வினவுதிரோ இங்குத்தான்
வாய்ந்த குருக்கள்வழி வந்தோம்—ஏந்தியசீர்
பாண்டவரும் பாஞ்சாலி பின்னின்ருள் பாரதற்கிங்
கீண்டியமா விந்தம்போ வோம். (137)

எ.து. நாங்கள் குரு வம்சத்துப் பாண்டுபுத்திரர், பஞ்ச பாண்டவற்கின்றோ மற்றிவளும் பாஞ்சாலன் பயந்தாள் துரோபதையாகின்றாள் யாங்கள், தன்மராச்சியம் செய்யா நின்றகாலத்து துவாபர முடிவும், கலியுகத்தலையும் உலோகம் சத்திய விரதம் குன்றிப்போய்ப் பரந்து வருவது கண்டு ஸ்ரீ வாசுதேவன் பணிப்ப இராச்சியந் துறந்து மகாவிந்தம் போகின்றோம் என்று தன்மபுத்திரன் சொல்லக்கேட்டுக் கன்னியர்கள் யாது செய்தார்.

---

1,2 இவ்வடிகள் இருந்தவாறே எழுதப்பெற்றது.
3. ஈற்றடி சரியாக இல்லை. 4. வாறு சேர்க்கை.

பஞ்சவர் நீராகில் பார்த்தன்தா னார்கொலோ
வெஞ்சமரில் அஞ்சாத வீமனென்று—அஞ்சாது
[1]போகுறியு மாற்ற மெடுத்துரையு மென்றுரைத்தார்
[2]மாற்குறியுங் கண்ணாள் மகிழ்ந்து. (138)

வீமனிவன் காண் விசயனிவன் காணு[ம்]
நாமத்தருமன்றா னான் காணும்—சேம
இரட்டையர்க ளிங்குநின்றார் ஏந்திழையீர் காணு
[3]மட்டாலி யாம்வந்த வாத்து[*வாறு]. (139)

எ.து. வீமசேனனிவ னென்றும், இவற்கிளையான் அர்ச்சுனன் இவன் என்றும், இரட்டையராகின்றார் இவர் என்றும் இவன் அனையவற்கு மூத்தான் தன்மபுத்திரன் ஆகின்றேன் யானென்றும், பத்தினியாகிய துரோபதையாகின்றாள் இவளென்றும், வேறாகக் கூறக்கேட்டுக் கன்னியர்களும் பெரிய காதலொடு யாது சொன்னார்.

செங்கோல் திசைநடப்பத் தேர்வேந்தர் போற்றி
அங்கனில முற்று மரசாண்டு—சிங்கா
தனமதனில் வீற்றிருந்தார் [*தார்வேந்தர்] மற்றுசெய
வனமதனில் வந்தாரோ நின். (140)

பொன்னங்கழல் மாப்போலும் நல்ல திருவடியே எம்முடைய சொல்.

எ து. திரிபுவனமெல்லாம் இராச்சியம் பெறினும் வேண்டாம். ஸ்ரீ வாசுதேவன் ஸ்ரீ பாதகமலங்களே எங்களுக்கு இராச்சியம் என்று தன்மபுத்திரன் சொல்ல, இவர்கள் நருசுறற மனிதராய் இருந்ததென்று சாலவும் கால்பெருகி யாது செய்தார் கன்னியர்கள்.

போதுமினி நாமென்று பொற்கொடியார் தங்களிலே
ஏதம் பலவு மெடுத்துரைத்துச்—சோதி
மணிவிளங்கித் தோன்று மலர்ப்பொய்கை நின்று
நிலைதுளங்கிப் போயினார் நின்று. (141)

---

* சேர்க்கை. 101-வது ஏடு இல்லை.

இவ்வகை நாக கன்னியர் போயினபின்னை பாண்டவரும் இராச.......... நமஸ்கரித்து விடைவேண்ட மகா இருடி யாது அருளிச்செய்தான்.

மற்றின்மலர்ப் பொய்கை நின்றுவடக் கேகுதிரேல்
வெற்றரவின் வாயதனில் மேவுதிரேல்—உற்றவற்
கு[ம்]
நான்முகற்கு [*மற்றவர்க்கு] நன்றாய்த் தவம்
புரிவான்
மேல்வருவ தேஉரைத்தான் மீண்டு (142)

எ.து. இந்தப் புட்கரணியினின்றும் வடக்கு நோக்கிச் செல்லுவீராகில் இவ்விடத்துக்கு மூன்று யோசனை சென்ருல் ஒரு மகா *ீநாகமுண்டாம். அதன்வாயில் அகப்படுவீராகில் பிழைப்பில்லை என்று மகாவிருடி சொல்ல இருடியை நமஸ்கரித்து வடக்கு நோக்கிப் போயினார் பாண்டவர் என்றவாறு.

இவ்வகை பாண்டவர் மூன்றுயோசனையும் நடந்துசெல்ல மகாவிருடி சொல்லிய மகா நாகத்துக்குப் பாண்டவரும் துரோபதையும் சாரநிற்பக் குமுதபர்வதமென்னும் மலையருகும் மகாநாகம் பூமிமேற் கிடப்ப ஆகாசமுட்டின வயிறும் வாயுமாய்க் கிடந்து புகையும் இரைத்தலும் வேறுபோக வழி காணாது இருடி சொன்ன மகாநாக மிதுவென்று ஐவருந் துரோபதையும் நின்றுவிசாரித்து நாகத்தைப்பார்த்து நிற்குமளவில் மகா நாகமும் பாண்டுவின் புத்திரரைக் கண்டு நாவளைத்துக் கொட்டாவி விட்டு எரிபோன்ற நயனங்களால் நோக்கிக் கிட்டவர நிற்ப, பாண்டவர் யாது செய்தாரோ எனில்,

அறுவரும் தன்வயிற்றி னுள்ளே புகுந்திட்டவர்
கள்தன் னுயிரை
அய்வரும் போய்ப் புரத்தாயினார் அவ்வனத்தில்
[முனிவன்
செப்பவரும் சாபம் சிதைத்து. (143)

---

* மற்றவர்க்கும் சேர்க்கை.

எ து. அறுவருந் தன் வாயினூடு வழிபோமளவில் தம்பிரானை அறிந்து வயிறு கிழித்து அப்புறத்தே உருவினர் பாண்டவர் என்றவாறு.

அரவ முருமாறி அந்தணனாய் வந்து
பரவிப் பணிவானைப் பார்த்து—விரவியநீர்
பேரின்ப மெய்தும் பெருந்தவத்தோர் நந்தமக்கின்
றாரென் றுரைப்பாய் இனி. (144)

எ து. பாண்டவர் வயிறுகிழிய மகாநாகம் சாபம் நீங்கிப் பிராமணனாக வேஷமாய்த் தன்மபுத்திரனுள்ளிட்டாரை வணங்கி நிற்ப இவர்கள் அவனைப் பார்த்து நீர் ஆரென்று தன்மபுத்திரன் வினவப் பிராமணன் யாது சொன்னான்.

மாமுனிவன் தன்னருளால் வந்திம்மலர்ப் பொய்கைதனில்
நாள்வழுவா வண்ணமலர் நானெடுப்ப—னாளொருநாள்
தாமமெடுத்து வரத்தாழ்த்த தென்னைத் தான்முனிந்து
சாபமிடக் கண்டழிந்தேன் காண். (145)

எ. து. பிரானே தன்மபுத்திரனே முன்னாள் ஒரு மகாவிருடி நாராயண பகவானைப் பூசித்திருப்பானுண்டு. அவனுக்குப் பூசைக்குதவ நான் பொய்கையிலே மலரெடுத்துக் கொண்டு செல்வேன். ஒரு நாளிலே சில கன்னியர்களைக் கண்டு பூசைக் காலத்துக்கு உதவ மலரெடுத்துச் செல்லாதே கன்னியர்களுடனே சுவாத்தம் சொல்லித் தாழ்த்து நின்றேன். இருடியும் கோபித்து இத்தனைபோது தாழ்த்த காமக்குரோதியன்றோ என்று நீ அந்தப் பொய்கை இடத்துப் பெரியதொரு பாம்பாய்க் கிடவென்று சபிக்க நானும் அந்தச் சாபத்துடனே இருடியைப்பார்த்து நீ இட்ட சாபம் நீங்குவதெப்படி என்று கேட்டேன்.

ஒரு நாளிலே பஞ்ச பாண்டவருந் துரோபதையும் மகா விந்தம் வருவார்கள். அப்பொழுது உன்வாயினூடு வந்து வயிறு கிழியப் புறப்பட்டபொழுது சாபம் நீங்குவதென்றும், அப்பொழுதுனக்கு மோட்சமென்றும், அருளிச்செய்தான். அந்தச் சாபம் இன்று உங்களாலே ஒழிந்தது. எம்பிரான்கள்

என்றும் ! இவர்களை மிகவும் இரட்சித்தவர்கள் நீங்களன்றோ என்று துதித்துப் போயினார். பிராமணன் மற்றவனுக்கு விடைகொடுத்துப் பின் அங்குநின்றும் வடக்கு நோக்கிப் போயினார் பாண்டவர்கள் என்றவாறு, அப்பொழுது

குன்றகத்தின் மேலே குடபால் வடபாலாய்ச்
சென்று சென்றேறச் செல்வரிதாய் – நின்றிருந்து
பன்னாட் பலகூடிப் பார்வேந்தர் சென்றடைந்தார்
முன்னோர் நெடுவரையின் முன். (146)

பல திவசம் வழியில் தங்கிக் கிழக்கும் மேற்கும் இரு விலக்காய்க் கிடந்ததோர் பர்வதத்தைக் கண்டு போகலாவதோர் நெறிகாணாது ஏறவும், இழியவும் இடமின்றி விசும்பு முட்டிய பர்வதமாய்க் கிடந்த இதனைக்கண்டு தம்பிமாரை நோக்கி யாதருளிச் செய்தான் தன்மபுத்திரன்.

நீள்வரையால் மேலுயர்ந்து நின்ற வரையதனில்
வாள்விசயர் வீமர் வரவரிதாய்க்—காளையர்காள்
கட்டுரைமின் என்றுரைத்தான் கார்வரைசூழ் நன்னாட்டை
விட்டுவரை சேர்ந்தான் விரைந்து. (147)

எ.து. தன்மபுத்திரன் தம்பிமாரை நோக்கி மனத்துயருற்று முகநோக்கிச் சொல்ல யாது செய்தான் வீமசேனன்.

எங்கோன்க ளார்ந்திட் டிடர்கூறத் தான்கேட்டு
இங்கேயோ யாமிருப்ப தென்றெழுந்து—செங்கமலக்
கண்ணன்றன் சக்கரமாய் கைதன்னைத் தியானித்துத்
திண்கமல மோதினான் சென்று. (148)

எ.து. வீமசேனன் கைத்தலமே திருமாலது சக்கரமாக வரைந்து பிரசாதித்துக்கொண்டு தன்கையாலே நெடுவரையை மோத

[அம்]மலைகள் பொடியாகி நீரெழுந் ததுமன்றி
மண்ணதிர்ந்து மாமலைகள் தள்ளாடி—உண்ணடுங்கி
நாகலோ கந்துளங்கி நின்றுநடுங் கிற்றே
வேகமுட னடிகண் மிக்கு. (149)

எ.து. இவ்வகை சத்த சமுத்திரங்களும் கலங்கிற்று. பூலோக பர்வதங்களும் கலங்கி நடுங்கிற்று. பிரமலோகமும் அதிர்ந்திட்டது அவ்வளவு *பருமனாய்க் கிடந்த குடி கன........ வடிவுபெற்று வீமசேனனைத் திருவடி தொழுது நின்று யாது சொன்னான்.

தேவாசுரன் சினத்துடன்ற காலத்து மாங்கே
பூவாருஞ் சக்கரத்தாற் பொன்றினரைத்-தேவர்கள்
வைகுந்த மாள்வதற்கு வைகுந்தனாங் கதற்கின்
றெய்தினார் சாப மிது. (150)

எ.து. தேவாசுரர் யுத்தம் பொருத காலத்து நாராயண சுவாமி திருச்சக்கரத்தால் பட்டு அசுரரை யான் கொண்டு போய் ஸ்ரீ வைகுண்டமேற்ற நாராயணசாமி முனிந்தருளி பர்வத மாய்............பாய், ஆகென்று சாபம் பணித்தருளிய சாபம் மோட்ச எங்ஙனம் நீங்குவதென்று வேண்டிக்கொள்ள யாது அருளிச் செய்தான். பாண்டுவின் புத்திரன் வீமசேனன், ஸ்ரீ வைகுண்டத்துக்கு வருவன் அப்பொழுது நின்னை அவன் கைத்தலத்தால் மோதிடுவன், அப்பொழுது சாபம் நீங்குமென்று அருளிச் செய்தான். அப்படியிலே யான் மோட்சமெய்தினேன் என்று நமஸ்கரித்து நிற்ப இருடி தனக்கு, விடை கொடுத்து அங்கு நின்றும் வடக்குநோக்கிப் போயினார் பாண்டவர் என்றவாறு. இப்பால் பெரியதொரு வனத்திடையே சென்றார் எங்ஙனமோ எனில்.

மூங்கில் மிடைந்தெழுந்து முப்பத்தைந்து யோசனைகள்
நீந்தற் கரிய நெடுவரைக—ளாங்கே
ஒருவகையாற் சென்றடைந்தா ரோங்குவரை யுச்சி
மருவினிய தோள்வீரர் வந்து. (151)

* * * *

பேசு, நீ யார் தான் உனக்குப் பேரேது உன்னைச் சாப மிட்டார் ஆரென்று அர்ச்சுனன் கேட்ப, அசுவமுகி யாது சொன்னாள்.

---

* பருமாய்க் கிடந்த மூ, பாடம்.

தெய்வமுனி யைச்சென்று திருக்கைதனைப் பிடிப்பத்
தெய்வமுனியுஞ் சினந் தெழுந்து-தெய்வ[பாவமது]
வாக்கினான் பாண்டவரை யந்தார் விசயனிது
நீக்குவா ரென்ரு னினைந்து. (152)

எ.து. இருடி பகவான் மகன் 'அத்துமி' என்பான் விட்டுணுலோகத்து நின்றும் வந்தான், அவனே யான் சென்று கையைப் பிடிப்ப அவன் முனிந்து நீ அசுவமுகத்தியாய் வனத்திடை வாழ்வாய் என்று சபித்தான்.

அப்பொழுது சாபம் மோட்சம்வேண்டி நின்றேன், பாண்டு புத்திரன் மகன் அர்ச்சுனன் மகாவிந்தத்துக்கு வருவான், அவனை நின் கையாற் பற்றித் தழுவி உன் சாபம் நீங்கி மோட்சம் பெறுதியென்று தெய்வமுனி அருளிச் செய்தான்.

நான் உன்னைத் தேடி உன் வரவு பார்த்திருந்தேன் அநேகங் காலமுண்டு நின்னாலே மோக்ஷம் எய்தினேன் கண்டாய் என்று நமஸ்கரித்து நிற்ப அர்ச்சுனன் சொல்வான். வாராய் அசுவமுகி நாங்கள் அனைவரும் போக என்னைய,

* * *

இவ்வகைத் தன்மபுத்திரன் உரைப்ப அனைவரும் அப்படியே துதிசெய்ய மற்றவள் அருந்துயரீந்து, பரமேசுரியிடம் பிரத்தியக்ஷமாக நோக்கி யாது அருளிச் செய்தாள் [என்னுடனே வேண்டும் வரம் வாங்கி]

என்னுடனே வேண்டும் வரம்வாங்கி இப்பொழுதே
பொன்னணிதார் மார்பா புகலுவீர்-மின்னிடையாள்
*வாக்கினாற் சொல்லவெங்கள் வைகுந்தம் சேரும்வகை
ஆக்குவாய் என்றா ரறிந்து. (153)

எ.து. பரமேசுரி என்னுடைய பக்கல் வேண்டின் வரம் வாங்கிக்கொள்ளுமெனப் பாண்டவரும் மேகங்களுக்கு வரமானது ஸ்ரீ வைகுண்[டம்பெ]றுவதே என்று விண்ணப்பஞ் செய்ய மாகாளியும் அப்படியே ஆகுதென்று பிரியப்பட்டு, அவளை நமஸ்கரித்து வடக்கு நோக்கிப் போயினார் பாண்டவர் என்றவாறு.

---

109-வது ஏடு இல்லை.

அப்பொழுது வன்கானிடைவழியிற் றங்கி யாது செய்தார்.

வழியிற் சிலநாட்கள் வன்கானிற் றங்கிச்
செழுவரையிற் சென்றணைந்தா ராங்கே—ஒழுகிவரும்
கங்கைநீர் பாய்ந்துகளும் கார்வயல்சூழ் நன்னாடர்
சிங்கம்போல் வார்களும் சென்று. (154)

இவ்வகை சென்றும்,

*மாயூரபர்வத மென்னும் வரைதிகையும் சண்பகமெங்
*கேயும்வளர் சோலை எழில்வனப்பி லந்தரம
மாருதம்வந் தூடாடும் வாவியிடைச் சென்றடைந்தார்
பாரதங்கள் சொல்லிப் பயின்று. (155)

சிறிதிடஞ் சென்றவாறே ஒரு பொய்கையின்கண் பெரிய தாகவும் புட்பங்களும் பல அருவியாறுகளும் உடையதொரு பொய்கையைக் கண்டு துரோபதையை நினைத்துச் சித்த சந்தாபத்துடனே யாது செய்தார் பாண்டவர்

மணிவாரிப் பொன்கொழிக்கும் வானதிசூழ் நன்னாட[ர்]
அணிபொழில்சூ ழாற்றங் கரைமேல்—இணர்மலர்த்தார்
மாமுரசு முன்னுயர்த்த மன்னவருந் தம்பியருந்
தாமிருந்தா ரரசின்கீழ்த் தான். [156]

இவ்வகை ஆற்றங்கரையையும் பொய்கையையும் கண்டு அதன் கரையில் பொலிவெய்தி நிற்பதொரு அரசின்கீழிருந்து யாது சொன்னான் தன்மபுத்திரன்.

பொய்கை யொருபாற் புனற்செருந்தி யொருபால்
நெய்தற் றடமொருபால் நீழலுட[ன்]—எய்தும்
சடைமவுலி தான்போகத் தக்கதே கானத்
திடைமருவும் பொய்கை இது. (157)

இவ்வகையே பொய்கையின் குணம் சொல்லியிருந்தபோது அவ்விடத்து வாழ்வானொரு சிங்கிலி என்பானொரு மகா

---

111-வது ஏடு இல்லை. * வாற்றினால் மூ. பாடம்.

விருடியைக் கண்டு நமஸ்கரிப்ப அவனும் இனிது பேசிச் சாகா, மூவா, பலமருந்தியிருக்கின்ற விருடி யாதுசொன்னான்.

உள்ளவா கண்டுகந்தே னாகிலு மும்மைநான்
உள்ளவா கேட்குந் திறமுளதால்—வெள்ளமீன்
மண்டிவயல் சேரு மாநிலத் தீரோவென்று
விண்டவன்றன் கேட்டான் விரைந்து. (158)

என்பது, நீங்கள் பூலோகத்து மனிதர் போலிருக்கின்றீர் உங்கள் வரலாறு தெளிய வுரையுமென்ன யாது சொன்னான் தன்மபுத்திரன்,

மாரிபெருக அறம் பெருக மண்முழுதும்
வாரிபெருக வளம்பெறுக ஆரியர்கள்
நாவின்மறை பெருக ஞாலமுழு தாண்டிருந்த
தாவ்புகழ்ப் பாண்டவரோ தான். (159)

என்பது, மண்ணெல்லாம் வளஞ்சுரக்க அறம்வளரத் தன்ம தானம் பண்ணாநிற்பத் துவாபரம் நீங்கிக் கலிபுகுந்தவாறே ஸ்ரீ வாசுதேவரும் வைகுண்டத் தெழுந்தருளிப் புகுந்தார்.

யாங்கள் ஐவரும் மாவிந்தம் போவதற்கு வந்தோம். இது எங்கள் வரத்து என்று தன்மபுத்திரன் சொல்ல மகா இருடியும் விதிபோல்வானன்றோ, விதியை வெல்ல வல்லாரில்லை என்று சொல்லியிருந்த இடத்து யாது சொன்னான் மகாவிருஷி. நீங்கள் தளர்வெய்தி இருந்தீரோ, பசியுண்டோ என்ன எங்களுக்குப் பாகம் பண்ணியிடுகிறவள் துரோபதை என்பாள் வழியிலே நடையினால் தளர்ந்து மரித்தாள் அதுகொண்டு மூன்றும் மூவநச மாயிருந்து ஆகாரங் கொள்ள அன்றித் தபித்தோம் என்ன விருடியும் விசாரித்துச் சாகாமூலபலங் கொள்ள அறிவீரல்லர் என்று, தன்னாச்சிரமமே கொண்டுபோய் யாது செய்தான் இருடி

---

*இவ்விரண்டடிகள் சீர் சரியாகவில்லை.

வானின்ற மங்கையரைப் பார்த்தந்த மாவிருடி
தானீன்ற மைப்பறுவர் தங்காது—கானீன்ற
கற்பகந்தா னீன்ற கறிசோறுடன் றயிரும்
அற்புதமாக் கொண்டுவந்தா ராங்கு. (160)

எ.து. கன்னியர்கள் கறியுஞ் சோறுந் தயிருங் கொண்டு வந்தவிடத்துப் பாண்டவரை (அ)முது செய்வித்திருக்குமளவில் ஆதித்தனும் அத்தமன பர்வதம் சார்ந்தான். அப்பொழுது மகா விருடியை நோக்கித் தன்மபுத்திரன் சொல்லுவான்.

மானத்தை இல்லாக் கலியால் மனைவிட்டுக்
கானத்தை யாங்கள் கடிதடைந்தோம்—ஞானத்தை
பேணுமாறு செய்யும் பெரியோனே மாலவனைக்
காணுமா றெங்கனே என்று. (161)

படர்சடைகள் தாங்கிப் பருவரையைச் சேர்ந்த
கடருமா றங்குட்ட மூன்றி—உடலின்
உயிரங்க வுன்னி ஒருநெறியே பார்த்தாலுந்
தெரியவரியான் காணென்றான் தேர்ந்து. (162)

எ.து. ஒரு கடகிய ஒருவன சரிதாராய்த் தங்கள் மெய்யினும் அவனைக் காணுதற்கரிது கண்டாய் என்று பின்னும் சொல்லும் மகாமுனி.

அல்லும் பகலு மழல்கொண்டு நின்றாலும்
வெல்லும் பரியன்ன வேல்வேந்தே—நல்ல
திறமறிவார் சிந்தை தெளிவின்னா நிற்பானும்
அறியா னும்பற் குணர்ந்து. (163)

அன்றியும்,

வானவற்கும் காண்டற் கரியமலர்ப் பாதம்
தானவற்கும் காணாத் தகைமைத்தே—ஞானமிக
இந்திரனே நான்முகனே யீசனே என்றிவர்கள்
மந்திரித்துக் காணார் மரித்து. (164)

அன்றியும்,

ஓங்காரமாகி யுணர ......................................................
யானும்மைப் பலவுஞ் சொல்லி விலக்கினேன். நீங்களினி வடக்கு நோக்கிச் சிறிதிடம் சென்றவாறே நெறிகாணலாம் என்று இருடி சொல்ல ஆதித்தன் உதயம் செய்தருளினான். பாண்டவரும் மகா விருடியை நமஸ்கரித்து வடக்குநோக்கிப் போய் நீரும், நிழலும் இல்லாததொரு கொடிய வனத்தைக் கண்ணுற்று தண்ணீர்த் தாகமாய்த் தம்பிமாரை நோக்கி யாது சொன்னான் தன்மபுத்திரன்.

அத்தியூர் வாழ வந்தூர நற்கண்ணர்
மெத்திகையின் தண்மா லிருஞ்சோலை-அத்தியுடன்
வானவர்கள் போற்றும் மதிலரங்க வேங்கடமே
ஏனவுரு வானா னிடம். (165)

இவ்வகைத் துதித்து தாகந்தீர்ந்து போய் யாது கண்டாரோ எனில்.

பிறை கவ்விநின்ற பெருங்குன்றம் போலத்
துறையடைத்துத் தோன்றுமோர் துட்டக்—கறைமுகவேற்
கண்ணுடையான் மன்னவரைக் கண்டுகலந் தெழுந்தாள்
பெண்ணுருவாய் நின்றுழலும் பெண். (166)

எ.து. ஆரணியத் தூடே செல்லாநின்ற பாண்டவரைக் கண்ட பர்வதம் போல்வாள் ஒரு இராக்கிஷ நமக்கிற்றை.

*　　*　　*　　*

....ள கருவரை போலன்று நின்றகார்......
——க்கி யாங்கேநி ——.... (167)

*　　*　　*　　*

............கழல் பணிந்தாள்..........
காவலரை வண்டிரைக்குங் கூ..............
.............. திரள் பண்டுநீச...........
சாலப் பழையார பொற்பைந்தொடி பணிந்த காரணத்தைக் கட்டுரையாய் என்றான் அழல்...........

---

127-வது ஏடு இல்லை. 129-வது ஏடு இல்லை.

—— ——....யோ துரோபதைக்குச்
சார்ந்தாய் ஒலிந்த வாரண........து சொன்னாள்
அந்தமில் சீர் மாதவத்தோன் புத்திரி. (168)

* * * *

விருஷியைக் கண்டு தன்மபுத்திரன் சொல்லுவான்.

தடுப்பதற்குக் காரணம் ஏதெனச் சொல்லுவான் இப் பருவதத்தில், நாலு வாசலுங்காத்து நிற்பாரில் விக்கினேசுரனுந் துர்க்காதேவியும் கேத்திரபாலனும் சாமுண்டீசுரியும் காவலர் ஆகையால் இங்கிவர்கள் நால்வருந் திருக்கண்சாற்றி அருளினால் ஒழிந்து யாவர்க்கும் போக வொண்ணுதென்ன அதற்குடன்பட்டு யாது சொல்லித் துதித்தார் பாண்டவர்.

சங்கினொடு நேமி தண்டுசிலே வாள் சூலம்
அங்கையிற் கொண்டன் றவுணரெல்லாம்—மங்கச்
செருவிளையாட் டாதே—.......ஏந்தி
அருவினைக டீர்த்தே அருள். (169)

இவ்வகை துதிப்ப மற்றவரும் கிருபை பண்ணிப்போங்களென்று பிரசாதஞ் செய்யப் பாண்டவரும் போய் அறுபத்து நாலு யோசனை சென்றார். அப்பால் செல்லும் நெறி எங்ஙனோவெனில்,

வராகமொடு மானு மறையு மயிலும்
குராகவிருங் குன்றுங் கொடிய—தராதலமாய்க்
கண்பமில வொண்ணுக் கடுவெளிசென் றெய்தினார்
எண்பது யோசனைக ளேய்ந்து. (170)

இவ்வகை, குரோத பருபத மென்னும் பருபதம் கண்டிலேன்.

வண்டுசெறி புண்டரிகங் காலக் கரதலங்கள்
பொன் மேனி மண்தான்.... ....
பண்டு உண்டான் வடிவு......— (171)

---

130-வது ஏட்டில் பாதி இல்லே.
131—136 ஆறு ஏடுகள் இல்லே.

என்பது நானும் நாராயண சுவாமியை இப்படியே கண்டோம், நீயுங்கண்டாயாகில் கண்ட வண்ணம் சொல்லுதி என்று சிறிய வாசகம் சொல்லத் தன்மபுத்திரன் சொல்லுவான்.

மாலைநினைந் திருந்தேன் வல்வினையால் மாதினொடு
சால நினைந்திடுந் தம்பியரை—ஞாலக்
கருத்தாய் நினையுந் தன்னுள்ளே நின்று
வருந்தா மயலாக்கு மற்று. (172)

இவ்வகை என்னை பஞ்ச இந்திரியங்கள் மயக்காநின்றன என் சித்தம் எம்பியரை நினைந்தழியும் ஒருபால் திருமாலை நினைந்து அழியும் ஒருபால் பாஞ்சாலி திறத்தாரும், ஒருபால் குந்தி தேவியையும் காந்தாரியையும் நினைக்கு மோன நெறியில் அங்கு, வாய் அங்காந்து யாது செய்தான்.

வாங்குகடற் பாரில் வந்துமுன் போனயுகம்
ஆங்கறியவே விசனத்தாலோ—கோங்கின்முகை
ஒக்குந் தனமுலையாள் ஓங்குதிரு மார்பா
மிக்கெங்கட் கெல்லாம் விளம்பு. (173)

என்பது. முன்னையுகங்களில் ஸ்ரீ வாசுதேவர் செய்தருளிய பராக்கிரமங்களும் பிர்மா செய்தருளிய பராக்கிரமங்களும் பரமேசுரன் செய்தருளிய பராக்கிரமங்களும், மூவரிலும் செயமுடையார் யாவரென்று நாங்கள் அறிய அருளிச் செய்வாய் ஆகென்று வீமசேனன் கேட்பத் தன்மபுத்திரன் அருளிச் செய்வார்.

மண்ணுண்டு மண்ணளந்து மண்ணுமிழ்ந்தார்
வார்த்தைதனை
அண்ண லுரைசெய்ய வதுகேட்டுத்—திண்ண
வழியதனைத் தாங்கடந்தார் வண்மை பலசொல்லி
பொழியுமதஞ் சேர்களிற்றுர் போய். (174)

---

142-வது ஏடு இல்லை.

*ஏட்டில் இருந்தவாறு எழுதப்பெற்றது.

என்பது. நாராயணசுவாமி செய்த பராக்கிரமங் கேளுமென்று சொல்லுவான், அக்கினிக்கண்ணியன் என்னுமுகத்தின்கண் ஈசுரனும், விட்டுணும், பிர்மாவும் கூடியிருந்த விடத்து பிர்மா சொல்லுவான். யான் சிருஷ்டித்த பாரங்களையோ—

* * * *

.................... நெஞ்சா, யாது செய்தான் வீமசேனன்..........ன் யாது செய்தான் வீமசேனன்

* எண்ணுங்கால் ஏழுலகம் அஞ்சிட்ட தென்கொலென
கோத்திட்ட வால்பாவங் கேட்டுஇராக்கதனு மஞ்சிய
மெய்தளர்ந்து பார்த்தமுகங் கருகிப்பறக் கிட்டியாத்த
விண்சுழன்று வீழ்வதுபோல் மிக்கு.

அப்பொழுது வி.........ன மகாமேருவைப் போல.......ன மகா மேருவைப்போல தோற்றமுடையவன் உடன்,

.......லெ, பரமாக்கி விடுகின்றேன். காத்துக்கொள்ள.......... விரோவென்று கூறிச் சமரணை பண்ணுமளவில் சதுர்த்தச புவனங்......பபனையாக்கி அந்தநிலையில் ஒரு குழவி ஆற்றிடம் ஆலித்து அழா திற்புத் திறத்திலே குழவியாகக் கிடந்தழுத விட்டுணுவைக் கண்டு அதிசந்தோஷத்தைச் சொல்லுவான் சமஸ்தமும் நீயே ஆதலால் நீ சமஸ்த முமக்கிவை (முழுது)ம் எழுதும் எமக்குக் காட்டுவாயாகென்ன அனந்தசயனனும் இவை அனைத்தையும் மீளவும் இழிந்து காட்டினான்

கடலடைத்த வாறுங் கடலிலங்கை புக்குப்
பொடிபடுத்திப் போந்தவா றெல்லா—மிடிமுரச
முன்னுயர்த்தோன் மொழியவே முற்றுணர்ந்தோர் மாவிந்தம்
*பின்னுயற்கப் போவார் பெரிது. (175)

என்பது. திரேதாயுகத்தின் கண்ணிராவணனோடு யுத்தஞ் செய்து இலங்காபுரியை அழித்தவாறும் வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு இராஜ்ஜியம் கொடுத்து நன்மை பலவுஞ் சொல்லிப்

---

*பின்னுயரப் போவார் என்றிருத்தல் வேண்டும்.

பர்வதங்களும் மரமடர்ந்த காடுகளும் கடந்து எண்பது யோசனை சென்று ஒரு வட விருஷங்கண்டு அதன் கீழிருந்து யாது சொன்னான் தன்மபுத்திரன்

உரு........வனிங் கிருநிலத்தைத் தானே யகற்றிக்
........கொண்டொழுகுந் தன்மையால்-தானடைந்த
பொன்னின்ற மார்பகலம் போந்தது மற்றெல்லாம்
மன்னன் பணிந்தான் வகுத்து. (176)

இவ்வகை யாலின்கீழிருந்து ஸ்ரீ வைகுண்டநாதன் தொழில் களைப் பாராட்டி நடந்து தூரமுஞ் சொலி நாராயணன் கீர்த்தியே கொண்டாடுகின்ற பாண்டவரைத் திருவுளத் தடைத்து, மற்றவர் விப்பிரகாயமறிந்து வருவாயாகென்று வயின தேவனை விடை கொடுத்தருள, வயினதேவனும் கடுகவர விசைந்து ஸ்ரீ பாதகமலங்களை நீங்கி அன்னமாக வடிவு கொண்டு வந்து பாண்டவர் கூறுகின்ற நார்ராயணன் கீர்த்திகளை வட விருஷத்தின் மேலிருந்து கேட்டுக்கொண்டு பாண்டவரை நோக்கி ................... வாறு சொல்லி[ற்]றோ வெனில்

ஒல்லைநீ ரெப்பொழுது மிங்கிவ்னை ஓயாமற்
சொல்லுதிரோ எவ்விடத்தான் சொல்லுவீர்—அல்லாது
கற்றுநீ சொல்லுதிரோ கார்மேக வண்ணனைத்தான்
உற்றுநீர் சொல்லுதிரோ ஒப்பு. (177)

எ.து. நீங்கள் பலகால் இவ்விடத்திருந்தவனைப் பராக் கிரமங்களே பேசுகின்றீர். நீங்கள் அவனை அறிவதுமுண்டோ அதுவன்றியே கேட்டி......ருந்து சொல்லுகிறீரோவென்று அன்ன மாகிய புள்ளரசன் கேட்ப விருட்சத்தின் மேற்பார்த்து அன்னத் தினைக் கண்டு யாது சொன்னான் தன்மபுத்திரன்.

உருக்கரந்து வந்திங் குறைகின்றீ ராரோ
அரக்கரோ வானவரோ அன்பாற்—கரக்கமறக்
கூறுவது மற்றுனதே கூறுநீ ரென்றுரைத்தான்
தேறியுருத் தோன்றச் சிறிது. (178)

146—148 மூன்று ஏடுகளில்லை.

எ.து. நீர் உருமாறி வந்தீர் இராக்கதரோ, வானவர்களோ வித்தியாதரரோ, விட்டுணு நாதரோ ஆரென்று சொல்லுமென்ன வயினதேவனும் நீங்கள் ஆரென்று சொல்லுங்கள். ஆராகிலென்! நீங்கள் பலகாலும் நாராயணசுவாமி கீர்த்திகளைச் சொல்லுகின்றீயோ என்னை முன்பும் அறிவீரோவென்னத் தன்ம புத்திரன்

ப்பிறப்பு முற்றோ.... .........
முரம் பிடித்துக் கொண்டோ முணர்ந்து.

* * * *

அன்றியும்,

தெய்வர்க்குந் தெய்வத் திருப்பாற் கடற்கிடந்தான்
எவ்வறகும் நாராயண னெங்கோன்—மேவித்தன்
வைகுந்தஞ் சேர்த்தான் மனத்துக்கோ மாதவன்காண்
*வைகுண்டங் காட்டு மருந்து. (180)

எ.து. எங்களுக்கு இராச்சியமாவதும் ஸ்ரீ தேவியாவது நாராயணன்றன் திருவடிகளே கண்டாய் என்று பாண்டவர் சொல்லி ஸ்ரீ கருடனும் பெருகப் பிரியப்பட்டு நீங்கள் திருக்கேதாரத்தைக் கழித்து ஸ்ரீவைகுண்டம் புக விட்டுணு சுவாமி திருவடிகளைப் பிரசாதித்து விண்ணப்பஞ் செய்வான்.

பாண்டவர்கள் கண்டிமையத் திறம் பிழையாதவாறும் அவர்கள் செறி வயிராக்கியமும் அவர் ஒரு மாத்திரையும் மறவாமல் விட்டுணு கீர்த்தியை செய்திருக்கிறவாறும் சொல்லரிய பக்திமார்க்கங்களும் ஸ்ரீ கருடாழ்வான் விண்ணப்பஞ் செய்யக் கண்டு சந்தோஷித்துத் தம்பிமாரை நோக்கி யாது சொன்னான் தன்மபுத்திரன்.

இது கிரேதாயுகத்தின்கண் இந்திராதி தேவர்கள் அசுரரைக் கொல்லவேணுமென்று, இவ்விடத்திருந்து மனந்தளர்ந்து சுரோணிதபுரத்தை அழிக்கவென்னச் *சூக்தனுடைய முகங்களில் ஓர் முகத்தில் ஒரு முகம் தம்மை அசுரர்க்குச் சொல்லி இந்திராதி

---

* வைகுந்தம். பா—பேதம். 150வது ஏடு இல்லை.

தேவர்கள் எல்லாம் திரிநேத்திரனுக்கு அறிவிப்ப அவனும் பிரமாவின் சிரத்தைச் செயிர்த்துத் தர வேணுமென்று தேவர்கள் விண்ணப்பஞ் செய்யத் தேவதேவனுடன்பட்டு பிரம சிரசு பேதித்தான். அதனால் முன்னாளிலே மந்தன[ன] மிருந்தமை யினால் மந்தன பர்வதமென்னும் பேராயிற்று என்று தம்பி மாருக்குச் சொல்லி இருக்குமளவில் சகாதேவனுக்கு யாது நிகழ்ந்ததோவெனில்,

விண்ணு மிகஅதிர்ந்து மீன்பகலே தான்விழுந்து
கண்ணின் விழிசுழன்று கால்நடுங்கி—துண்ணென்
றுவாதசங் காட்டி யிருந்துயர மாயிற்றே
ச(கா)தேவன் என்பான் தனக்கு. (181)

அப்பொழுது * துடுக்கென்று தன்மபுத்திரனைத் தொழுது யாது சொன்னான் சகாதேவன்

கண்ணீ ரொழுகும் புருவங் கடந்துடனே
எண்ணுங்காற் றோளு மிடந்துடிக்கும்—நண்ணியோர்
பொல்லாக் குறிகள் பலவும் புகுந்தானே.......
சொல்லா யிதென்றான் தொழுது. (182)

இப்படிச் சில துர்க்குறிகளுந் தோன்றிச் சூல பாசத்தராய் வந்து தோன்றி என்னை அணுகா நின்னார். அதுவுமன்றியே திவ்விய விபானமுந் தோன்றிற்று என்று தன்மபுத்திரனுக்கு விண்ணப்பஞ் செய்து வீமர்ச்சுனர் நகுலரைப் பார்த்து நமஸ் கரித்துச் சொல்லுவார். 'நம் சுவாமியாகிய தன்ம குந்திதேவியை யும் இராச்சியத்தினையும் துறந்து மகாவிந்தம் போந்தார் நினக்கு இவ்விடத்தே அபத்தையாயிற்று. நீங்கள் மூவரும் தன்மபுத்திரனை இரட்சித்துக்கொண்டு போங்களென்று அவர் களையும் இரந்துகொண்டு பின்பு பஞ்சேந்திரியங்களைச் சாந்த மாக்கி நாராயணசாமியை எவ்வாறு உணரத் துதித்தானோ எனில்,

---

* துற்கண்டு. எ.து. மூலபாடம்.

## துதிப் பாடல்

பாரேழு முண்டுமிழந் தானே சரணம்
பாரேழு மீரடியா லளந்தானே சரணம்
பாரேழு முனைப்பணிய நின்றாய் சரணம்
பாற்கடல் மேற்றுயிலுங் கார்க்கடலே சரணம் (183)

அராவந் தடிபணிய நின்றாய் சரணம்
அவுணர்கடம் போர்தொலைத்து நின்றாய் சரணம்
உத்தமனே கடலைஅணை செய்தாய் சரணம்
சங்காழி அங்கயிலே வைத்தாய் சரணம். (184)

என்றிவ்வகை துதித்துப் பின்னும் யாது சொல்லித் துதித்தான் சகாதேவன்

மாதவனே கோவிந்தா வென்பேனான் வாயினால்
மாதவனும் வந்தென் மனத்துளான்—மாதவனே
ஆரணனே அச்சுதனே அண்டர் தொழும்
நாரணனே என்றுரைப்பே னான். (185)

இவ்வகை துதித்து மோட்சமெய்தினான் சகாதேவன் என்றவாறு

அப்பொழுது தன்மர், வீமர், அர்ச்சுனர், நகுலர் தளர்ந்து வீழ்ந்தலறிச் சிறிது தேறி எழுந்திருந்து யாது சொல்லிப் பிரலாபித்தாரோவெனில்

பஞ்சவர்க ளென்னும்பேர் பாரிற் பழுதாக்கித்
துஞ்சுவதோ தேவர்சொல லொன்னாத்—தஞ்சமே
போழ்ந்தோனா நீயொளித்துப் போவதோ தானென்று
வீழ்ந்தார்கள் சாதேவன் மேல். (186)

இப்படி நால்வரும் பிரலாபிக்குமளவில் வீமசேனன் யாது சொல்லிப் பிரலாபித்தானோவெனில்,

குருக்களிளங் களிறே கோளரவத் தோனைச்
செருக்கழித்த சேவகனே செப்பாயா—கருணை
ஆரணியத் தெம்மை யகல்வதோ வையாவெங்
கானகத் தூடுங் கலந்து. (187)

சன்மாந்தரத்திற் செய்த விதியின்படி போயகல்வதோ வையாவென்றும்மை ஐவர் என்று சொல்லுமதனை பிரிவித்தாய் என்றும் வீமசேனன் கிலேசிப்பத் தன்மபுத்திரன் தேறிப் பலவுஞ் சொல்லி வியாகுலந் தணிக்குமளவில் திருவடி தொழுது யாது சொன்னான் வீமசேனன்.

பொங்கு முகில்கள் பொருப்பதனின் மேற்பொழிய
எங்கும் பரந்தங் கிருகரையும்—கங்கைநீர்
சென்றுவயல் மண்டுந் திருநாடா சாதேவன்
இன்றுநம் மைப்பிரிவா னேன். (188)

அது கேட்டு யாது சொன்னான் தன்மபுத்திரன்

நன்மை யுடையாரை யாரேனு நாடுங்கால்
புன்மை யுடையார் புறத்தாவர்—துன்னி
இருந்தா ருடன்பிரியா தேகுவரோ வென்றும்
திருந்தாருந் தோளினாய் செப்பு. (189)
10

எ.து. ஒருத்தர் வயிற்றில் பல புத்திரர் பிறப்பார்கள். ஒருவன் தானம் செய்வான், ஒருவனோ ஆராய்ந்து காரியம் விசாரிப்பன், ஒருவன் அறத்தின்வழி நிற்பன், ஒருவன் பரமாத்மா ஆவன். ஆதலால் அவர்கள் தன்வசம் கண்டாய் என்றும் இவன் நாம் எல்லாமிருக்க மோட்சமெய்திய காரணம் ஸ்ரீ நாராயணனை உள்ளபடி அறிவன் அதுவன்றியும் என்னாலும் சிறிதறியப்படுமென்றும் யாது சொன்னான் தன்மபுத்திரன்.

பாரதப் போர்வெல்லப் பலியிடுதும் யாமென்ன
பாரதப் போர்வெல்லாமல் பண்ணினான்—பாரதத்தில்
பட்டா ரவருடை பாவமது துடர.........
விட்டா னுடன்[வீ] விரைந்து. (190)

எ.து. நாம் பாரதப் போர் வெல்லப் பலியிட வேணுமென்று ஸ்ரீ வாசுதேவன் அருளிச் செய்ய நன்முகித்தக் களப்பலி செய்தான் இவனாதலால் அமர்க்களத்திற் பட்டார் பாவங்களிவனைத் துடர்ந்து விடாதென்று கருதி முந்த அழைத்து அருளினான். அதாகவேணுமென்று தன்மபுத்திர னுரைத்துச்

சகாதேவனுக்குச் சடங்கறுத்து அங்கு நின்றும் வடக்கு நோக்கிப் போயினார் பாண்டவர்கள் என்றவாறு.

## சகாதேவன் மோட்ச முற்றும்

இப்பால் சகாதேவனுக்குச் சடங்கறுத்துத் துக்கமெய்தித் தம்பிமாரைத் தேற்றி யாது சொல்லி நடந்தான் தன்மபுத்திரன்.

மந்தரமே மத்தாக வாசுகியே வான்கயிறா
அந்தமிலாச் சோமன் அணையாக—சிந்தாக்
கடல்கடைந் தார்செய்த கதையவற்குச் சொல்லி
இடர்களைந் தான்தன்ம னிசைந்து. (191)

அன்றியும்,

பாஞ்சாலி துஞ்சியதும் பாரின்மேல் தம்பின்னோன்
தான்போய் மரித்ததுவுந் தானினையா—நீஞ்சுபுனல்
மந்திரமென் றெல்லோரு மாதீர்த்த மாடுகின்ற
சந்திரவர் புக்கார்க டான். (192)

இவ்வகை நாராயணசாமி செய்த பராக்கிரமங்களும் சொல்லி இடர் களைந்தான்.

தன்மன் இசைப் பாஞ்சாலியையும் சகாதேவரையும் மறந்து போய் இருநூற்று ஐம்பது யோசனை கடந்து சந்திரகிரி என்னும் பர்வதத்தைக் கண்டு அதன்மேலேறி அங்குள்ள தீர்த்தங்களை யாடி, அந்தச்சுனையிற் குவளையும் தாமரையும் மலர்ந்தவற்றைக் கண்டு தம்பிமாரை நோக்கி யாது சொன்னான் தன்மபுத்திரன்.

உயர்ந்த தடவரைமேல் ஒள்ளிணையார் தங்கள்
முயங்கி விளையாடுமாப் போல்—கயங்குவளை
கண்ணன்றன் மேனியோ காரிகையார் கண்மலரோ
எண்ணுங்கால் வண்ண மிது. (193)

கண்ணன்றன் கண்ணோ கமலமல ரிவைதான்
கண்ணன்றன் மேனியோ காற்கமலங்—கண்ணன்றன்
சேவடியோ விம்மலர்கள் செவ்வாயோ விம்மலர்கள்
ஆவதுதா னம்போ ருகம். (194)

எ.து. இந்தத் தாமரை மலர் என்ன தவம் பண்ணிற்று. நாராயணன் திருவடிக்கு ஒப்பென்று சோடிக்கப் போனதென்று பேசியிருந்தார். அப்பொழுது தெய்வ கன்னியர் யாது செய்தார்.

வண்டுகளும் கிள்ளைகளும் மாமயிலும் பின் தொடரக்
கண்டுவரை யின்கட் காட்சியார் - ஒண்டொடியார்
செந்தளிர் போன்மேனிச் சிலம்பலம்புஞ் சேவடியார்
வந்தணைந்தா ராவிழ் மருங்கு. (195)

அரிசினமுங் குங்குமமு மாடைகளுமா மற்றும்
பரிசினங்கள் பாடேந்திச் செல்ல - வரிவையர்கள்
மாதீர்த்த மாடவருகின்றார் மன்னவ ராங்
கோதீர்த்தங் கொண்டார் குறித்து. (196)

இவ்வகை வருகின்ற தெய்வக் கன்னியர்கள் பாண்டவரைக் கண்டு கண்ணுற்றுத் தீர்த்தமாடுதலும் தவிர்ந்து மற்றுமிவர்களை நோக்கி யாது சொன்னார் கன்னியர்கள்.

மண்ணுலகில் உள்ளீரோ வானவரோ தானவரோ
எண்ணற் கரிதாக இவ்வனத்தே—நண்ணிநீர்
வந்தவறென் கொலோ வாய்திறந்து மற்றுண்மை
எந்தமக்கு நீருரையீ ரீங்கு. (197)

என்றிவ்வகையே நீர் ஆரென்று கேட்டக் கன்னியர்களை நோக்கி யாதருளிச் செய்தான் தன்மபுத்திரன்.

வானவருந் தானவரு மல்லயாரு மண்ணுலகில்
ஆனகுரு குலத்திலா டவரோங்—கானகதி
லாபேதஞ் செய்யு மருந்துயரந் தாமுழன்று
மாபெந்தம் போந்தோம் வழி. (198)

இவ்வ்கை நாங்கள் பாண்டவரோ மகாவிந்தம் போகின்றோம் என்று தன்மபுத்திரன் சொல்ல யாது சொன்னார் கன்னியர்கள்.

*வெஞ்சமத்தில் வென்றவிறல் வீமனை வன்றான்
நஞ்சடர்ந் தாரோடெதிர்ந்தா னார்கொலோ—பஞ்சவரில்
மெத்தமைந்த சொல்லில் தருமன்யா னென்று. (199)

* * * *

உலகம் போல் எய்தாது நீங்கள் வந்திருந்தால் நாங்கள் உங்களுக்குப் பிரத்தியட்சம் போல நடக்கின்றோம் என்று தெய்வகன்னியர்கள் சொல்லக் கேட்டு யாது சொன்னான் தன்மபுத்திரன்

செய்தற்கரிய தியாது முதவினீ ரிவ்வுலகில்
செய்தற்கரிய தெல்லாஞ்செய் தா—லுமையதற்
கண்ணுடையார் கண்ணன் கமலக்கழ லல்லால்
நண்ண வேறுண்டோ நமக்கு. (200)

என்பது பிறர் உபகாரத்துக்குப் பிரதி உபகாரம் பிறிதில்லை ஆதலால், வேறு ஒரு புவனமே விரும்போம் ஸ்ரீ வாசுதேவன் ஸ்ரீ பாதகமலங் காணவேணுமென்று தன்மபுத்திரன் சொல்லக் கன்னர் யாது சொன்னார்.

தாழ்வரைகள் பற்றித் தவஞ்செய்து தண்பொழில்சூழ்
ஆழமுடைப் பொய்கை யதுபடிந்து—மாமழையரின்
தங்கை ந...... ததோய் வன்றோ குருவேந்தீ
ரங்கதலத் தோர்முயல்வா ராங்கு. (201)

என்பது காம லோக மோட்சங்களைத் திறந்து விட்டாரு மில்லை, ஈசுரனுக்குக் கங்காதேவியு முமையும் என்று இருவருள், பிர்மாவுக்கு சாவித்திரியும் சரஸ்வதியும் என்று இருவருளர். விட்டுணுவுக்கு ஸ்ரீதேவியும்..........

* * * *

தை தெளிந்து ஸ்ரீ வாசுதேவனைச் சிந்திக்க வேணுமென்று தங்களாத்மாவைத் தேற்றி யாது சொன்னார் பாண்டவர்

---

*இப்பாடல் முற்றுமில்லை.159—161 வரை மூன்று ஏடுகளில்லை. 163-வது ஏடு இல்லை.

திருப்பாற் கடற்கிடந்த செங்கண்மால் சேர்வைத்
திருப்பான் வரப்பரிவாற் றம்முள்—விருப்பான்
மான்களிலும் பண்டங்கமல் லரொடு மன்றிறுத்த
கோன்பதத்தைப் போற்றினார் கொண்டு. (202)

என்பது ஸ்ரீ வாசுதேவன் ஸ்ரீ பாதகமலங்களைப் போற்றிக் கன்னியர்களுடன் மறுமாற்றம் சொல்லாமலிருப்பக் கன்னியரும் பொய்கையில் தீர்த்தமாடித் தெய்வலோகம் புக்கார்கள் என்றவாறு.

பின்னும் பாண்டவர் எவ்வணங் குறுகினாரோ வெனில்,

அனுமன்றன் னோனாம பீமனவன் தம்பி
அனுமக்கொடி விசைய னார்தான்—அனுமனவன்
எங்குலத்து மூத்தோ னிசைய வெடுத்துரைமின்
நங்குலத்தோ ராகி நமக்கு. (203)

என்பது, எங்கள் குலத்துக்குச் சேட்டனாகிய அநுமான் தம்பி வீமசேனன் என்றும் அவன் தம்பி விசயனுக்கு அநுமக் கொடி உண்டென்றும் கேட்டிருந்தோம். அவர்களையும் நகுல சகாதேவரையும் தன்மபுத்திரனையும் கூறு. நீங்கள் நம்குலத்தாரன்றோ எங்ஙனம் நீங்கள் மகாவிந்தம் போய் ஆரணியத்தூடே உழலவேண்டாமென்று உங்களுக்கு வேண்டும் தோத்திரம் பண்ணிச் சத்துருக்களையும் சயித்து உங்களை இராஜ்ஜியம் செய்விப்போம் மென்ற வானரங்களை நோக்கித் தன்மபுத்திரன் சொல்லுவான்.

உமக்கு விரதமது வன்றொ சொல்லும்
உமக்கெதிர் யாவருந்தா முண்டோ—உமக்குத்
தொழிலன்றோ மாவிரதம் சொற்பழுது போகுமா
வழிநின்ற கீர்த்தியன்றோ மற்று. (204)

நீங்கள் சத்துருநாசஞ் செய்விக்கவும், கொண்ட விரதம் குலையாமல் நிற்கவும் உங்களுக்கே வருமிதனை நீங்கள் எங்களுடைய வழியான வீரராகையால் உங்களைக் காணப் பெற்றோம். நாங்கள் செய்த புண்ணியமன்றோ வென்றும் உங்கள் முன்னோர் ஸ்ரீ ராமன் கெடுத்துக் கொடுத்தாரன்றோ என்றும்

நாங்களும் உங்களுக்கு வழியுறவாமையால் வீமசேனன் ஆவான். இவன் அர்ச்சுனன் ஆவான். இவன் தன்மபுத்திர னாவானிவன் என்றும் நகுலரென்றும் மற்றச் சகாதேவனும் துரோபதையும் வழியிலே மோக்ஷமெய்தினார் என்றும் பின்னும் யாது சொன்னான் தன்மபுத்திரன்.

*வையமுழு தாண்டு மாவிந்தந்தா னோக்கி
வெய்யகடுங் கானம் மேவினோம்—வையமினி (205)

* * * *

நாராயணன் ஸ்ரீ பாதகமலஞ் சேரவேணுமென்று மகாவிந்தம் வந்தோம், உங்களை இங்ஙனம் காணப்பெற்றோம் என்று சொல்லக்கேட்டு வானவீரருஞ் சொல்லுவார்.

எம் முன்னோர் ஸ்ரீ வாசுதேவன் பகை கெடுத்தாரென்று சொன்னீர். அந்தப் பராக்கிரமங் கேட்கவேணுமென்று வானரங்கள் கூறத் தன்மபுத்திரன் சொல்லுவான்.

* * * *

.......பாயக்கடி கிடங்.... ........
றுன்னிமலர் கவ்வித் தொடர்ந்தாள்—முன்னேயோர்
வாளை களித்து வயலுழக்கு நன்னாட்டில்
காளையர்கள் கண்டார் கயம். (206)

இவ்வகைத்தாகிய பொய்கையும் சமத்தடமும் பளிங்குத் தடமும், என்னும் பருப்பதமுங் கண்டு இதைக் கொண்டு இவை இற்றைக்கு எழுநூறு யோசனை இரவும் பகலுமாய் ஒன்பது நாள் வடக்கு நோக்கிப் போயினார் பாண்டவர் என்றவாறு.

*அக்கரமெல்லா மிங்கே இருந்தவர்கள் செய்தும்
அக்கரது செய்தும் மலையென்று—அக்கரவா
செக்கரங்கால் முன்னை நாட் செய்தவரங்(காட்டியதோ)
....... ....கரங்கள் கண்ட ாரவர். (207)

---

* இப்பாடல் முழுவதும் கிடைக்கப்பெறவில்லை.
168, 169-வது ஏடுகள் இல்லை.

இவ்வகை யக்கர பருப்பதஞ்சென்றேறுதலும் தன் பொலிவுங் குளிர்ச்சியும் கண்டித் தொடர்பானவொரு பருப்பதங்களுமில்லை என்று தன்மபுத்திரனுக்கு வீமசேனன் சொல்லுவான்.

தாமரை, குவளை என்று சொல்லப்பட்ட புட்பங்களையு முடைத்தாய்ப் பிர்மாவினிடம் போல இரா நின்றதென்று கேட்பத் தன்மபுத்திரன் சொல்லுவான்.

"யாற்கிலர்" (யாஜ்ஞவல்க்யர்) என்னும் தேவர்கள் பிரம லோகத்தில் நின்றும் வந்து தவசு பண்ணுகிற இடம் காணிது வென்று சொல்லி அங்குள்ள தீர்த்தங்களையாடி ஒரு விருட் சத்தின் கீழிருந்து நாராயணனைத் துதிபண்ணி நால்வருங்கூடி இருக்குமளவில் நகுலனுக்கு யாது நிகழ்ந்ததோ எனில்

மனமறுகி வாயுலர்ந்து நாச்சுழன்று மேன்மேற்
*கண்மழுங்கிக் காலுடனே தாழ்ந்து—[புனநடன]
ஒன்பான துள்ளத் தொருங்குகுறி காட்டிற்றே
தன்பால் நகுலன் தனக்கு. (208)

இவ்வகை வாரா[illegible]றவிடத்துத் தன்மபுத்திரனை நோக்கி யாது சொன்னான் [illegible]லன்.

சிவந்ததுகி லுடுத்துச் செஞ்சாந்தம் பூசி
சிவந்தசெழு மங்கையர்களாகிச்—சிவந்திருவர்
சூலமொடு பாசம் பிடித்தெதிரே தோன்றினர்
காலனொடு கூற்றம் கலித்து. (209)

இவ்வகை தோன்றிற்று ஆகில் இது எனக்கும் காலமாயிற்று. எம்பெருமான் வீமார்ச்சுனரைக்கொண்டு மகாவிந்தம் எழுந்தருளு வாயாகென்று பின்னை வீமார்ச்சுனரை நோக்கிச் சொல்லுவான்.

தன்மபுத்திரனுக்கு இனி உங்களை ஒழியச் சகாதேவனும் தூரத்தாராயினோம்.நீங்கள் இரட்சித்துக்கொண்டு போமினென்று

---

* இப்பாடல் இருந்தவாறே எழுதப்பெற்றது.

* கனமழுங்கி மூ. பாடம்.

தானுஞ் சிறிதுபொழுது நாராயணசுவாமியை எவ்வண்ணம் துதித்தானோ எனில்,

கார்மேக வண்ணனே கண்ணபுரவா கச்சி
யூர்மேவி நின்றாய் உலகளந்தாய்—சீர்மேவு
தாமரையாள் கேள்வா சரணே சரணென்று
நாவுரை செய்தா னயந்து. (210)

எ.து. புண்ணிய புருஷனே, வேதப் பிரியனே, அரிகரி, புருஷோத்தமனே, அரிகரி அரங்க ஆரணா, அரிகரிதாமோதரனே, அரிகரி கருணாகரனே, அரிகரி குடவண்ணனே, அரிகரி, கேசவா, தன்மனே, அரிகரி பிஞ்ஞகன் துணைவா, அரிகரி திருமகள் தலைவா, அரிகரி என்று இன்னோரன்ன துதிகள் பண்ணியதைக் கேட்டுப் பாசசூலம் பிடித்து வந்தார் பயப்பட்டு யாது சொன்னார்.

அண்ண லடியா ரிடைக்கே அறியாதே
நண்ணினோ மென்று நமதூதர்—எண்ணித்
தொழுதகப் போயினார் சுந்தரத் தேரனுக்கு
எழுபிறப்பி யாமடிமை என்று. (211)

கால தூதர் நாராயணன் அடியாரை நாம் தீண்டுவதோ வென்று அகலப் போதலும் திவ்விய விமானங் கொண்டுவந்து புட்ப வருஷம் பொழிந்து நகுலனைத் தேவகுமாரர் கொண்டு போயினாராகக் கருதுவது.

அப்பொழுது நகுலன் மோட்சமெய்தினமை கண்டு தன்மர், வீமார்ச்சுனர் மகிதலத்திடை வீழ்ந்து படலால் வீமசேனன் யாது சொல்லிப் பிரலாபித்தானோ வெனில்,

வாழை முழுமட லின்போத் ததனை
வெள்ளைக் குருகென்று மீனினங்கள்—துள்ளிக்
கரையேறிப் பாய்ந் துழக்கும்சூழ் நாடா
வரையேறி நீ கிடந்தாய் மாண்டு. (212)

அன்றியும்,

மேகக் குழலாள் பயந்த விரட்டையர்த.... ..
........தந்த நெறி போதுமோ — சாகக்
கடவோமுன் னெங்கள் நெறிதானன் றேசெய்தீ
ரடைவோ முன்போ நீ. (213)

நீங்கள் இளையராயிருந்து மூத்தவர்க்கு முன்போகத் தகாதென்று பிரலாபிப்பானைப் பூர்வ விதிக்குத்......... து மென்று தன்மபுத்திரன் தேற்றவும் தேறாது பின்னும் யாது சொல்லிப் பிரலாபித்தார் வீமசேனன்,

ஒருவினை இருக்கப் பணிந்து இவன் முகத்தில் உண்டாகியதன்...... ........சொல்லுவாயாகவென இருடியை நோக்கி யாது சொன்னான்,

அச்சொல்லானதிவை யெல்லாம் முன்னாய் ............... அப்போது......... .........வேந்து—என்பது யான் விதியின் வலியென்ப தறியாதேவேழ..............கோஷமும் பிரமகத்தி தோஷமும் நீங்கும்படியும்........................... .. என்று கேட்டால் பாவதோஷமும் பெறுமே என்று கேட்டால் பாவதோஷம் பெறுமே (உம)க்கியாது சொன்னான் மகாவிருடி வேங்கை.......... யா, பூ பாண்டவர்கள் கீர்த்தி பகர நீ கேட்டறியி லீண்ட .... ...... க, க மேய்ந்த சிகரச் செழுந்தார்க்குஞ் செவ்வாய்த் திருநாமம் நின்று ...............என்பது இவன் குணங்களும் மா ..........மெழுதின வடிவும் மென்மனம் ........... விட்டகலாதே ............... எறிக் காட்டினதும், என் நெஞ்சைவிட்டு நீங்க ................கிரியைகளும் நடத்தி அங்கு நின்றும வடக்கு நோக்கி...............

## நகுலன் மோட்சமுற்றும்.

எத்தனையு மாங்கே எழில்.

அப்பொழுது உனக்கு மோட்சமென்று இருடி அருள் செய்தான். அப்படியே நீர் வருவீராக.

அண்டர்பிரான்கள் என்ன அவனுக்கு விடை கொடுத்து வடக்கு நோக்கிப் போயினார் பாண்டவர்.

—.......று) அப்பால் பிரளய தீர்த்தமென்னும் தீர்த்தமாடிக் குருசிக மென்னும் பர்வதங் கண்டார்.

அங்குள்ள தீர்த்தங்களை யாடி பர்வதத்தின் மகிமையைக் கண்டு பிரியமெய்தி யங்கிருந்தார்.

மகாவிருடியைக் கண்டு மூவருஞ் சென்று நமஸ்காரஞ்செய்து நிற்ப மற்றவனும் சுவர்க்கச் சொல்லி மிக்கப் பணிந்து விருந்த பொழுது ஆதித்தியனும் அத்தமன பர்வதஞ் சார்ந்தான். அப் பொழுது இருடி.... ............ (சொ)ன்னான்·தன்மபுத்திரன்

*வையகத்து வாழ்வா யெல்லாம் வாழ்வேந்தர்நங்
கோமான் ........ ...... ... — .. ........
வந்துரைத்தான் கைதைக் கரையருகே நின்றலருங்
கங்கை சூழ்நாடன் வரைமருவு தோளான்மனம்.

தாங்கள் பாண்டவரென்பது தங்கள் இராச்சியம், நீதி பரிபாலனமெல்லாஞ் சொல்லி அஃதெல்லாங் கேட்டு யாது சொன்னான் மகா இருடி

இந்தவரைமேல் இனிதிருக்கும் கன்னியர்கள்
அந்தமில் சீர் ஐய ... ........
.. .......கின்றே நீர்போந்து கண்டங்கினி திருமின்
வாட்டங்கள் தீர மகிழ்ந்து. (214)

எனக்கே ..............
சொன்னான் தினைத்தனையும் நன்றிகொள்முன்
செய்தாற்குப் பின்னை...நொந்தாலு மாங்கதுதான்
உன்கையிலே மீளநாங் கொள்ளே மிகை.

எ.து. அது கேளாய் மாமுனி வசனங்களுக்குப் பிரதி வசனமில்லை. அவர், தினைத்துணை நன்றி செயினு மதற்கு எத்தனை அன்பு செய்தது வெல்லுமாதலால் நாங்கள் கொள்ள

*பிரதியிற் கண்டபடியே எழுதப்பெற்றது.

வேண்டும் வரமாவது தெய்வமுனி..................யாது சொன்னான் தன்மபுத்திரன்,

நல்லானை நான்முகனை நாபின் கட்டேற்றுவித்த
வல்லானை மாயஞ்சி இருகமல பொற்பாதம்
சேர்த்துவ தெங்கள் செயல். (215)

என்பது, நாங்கள் இராச்சியம் பண்ணியும் பெண்ணாசை ஒழித்து ஸ்ரீ வைகுண்டநாதன் ஸ்ரீ பாதகமலங்களே சிந்தித்துப் போகின்றோம்.

எங்களுக்கு மகாவிந்தம் போகின்றதே எல்லாச் சுவர்க்கமும் என்று தன்மபுத்திரன் சொல்ல, மகா இருடியும் மகிழ்ந்திருப்ப ஆதித்தன் உதயஞ் செய்தருளினான். பாண்டவரும் இருடியை நமஸ்கரித்து விடைகொண்டு அங்கு நின்றும் வடக்கு நோக்கிப் போய் அக்குரோணிதல மென்னும் வனம் புக்காரென்றவாறு.

பாதங்கள் பரலுரைப்பப் பார்வேந்தர் பாண்டவர்கள்
காதம்பல சென்றார் கார்வரைமேல்—நாதங்கொள்
மங்கையர்க ளோரிருவர் தம்மை யருநெறிக்க
ணங்கவர்கள் கண்டார்க ளாங்கு. (216)

இவ்வகைப் பிரவாள மென்னும் பர்வதங்கண்டு அங்குள்ள தீர்த்தங்களை ஆடியவிடத்துத் தவம் புரிகின்ற மகா இருடிகளைக் கண்டு கன்னியர்கள் இவரைக் கண்டு யாது சொன்னார்கள்.

ஐந்துமலர் வாளிஅமர் செய்யும்போர் வென்று
சிந்தையது காத்துத் தியானத்தைப்—புந்தியினில்
கொண்டிருந்து நோக்குவார் கண்டாரக் கொற்றவர்கள்
வண்டிருந்த பூங்குழலார் வந்து. (217)

இவ்வகை இருந்துள்ள கன்னியர்கள் பாண்டவரைக் கண்டு யாது சொன்னாரோவெனில்,

ஆரோ வழியறியீர் வந்தீரோ வாதமிளைத்
தாரோ அருள்சேர்ந்த ஆடவரோ—சோராமல்

உள்ளவா றெல்லா மெடுத்துரைமி னென்றுரைத்தார்
கள்ளவிழு மீர்ங்குழலார் கண்டு. (218)

எனக் கேட்டுத் தங்கள் வரலாறெல்லாம் அவற்குறைப்ப இருடியும் கன்னியரும் நீர் பாண்டவராகில் உமக்கு வேண்டியது கேண்மின் என்னத் தன்மபுத்திரன் யாது சொன்னான்.

இலங்கை மலங்கத் தடக்கையில்வில் லேந்திச்
சலங்கொள் தசக்கிரிவன் றன்னை—குலங்கொன்ற
வெங்கணையால் வென்றடர்த்த வாழியான் பாதமடைந்து
விடுங்க ளென்றே யருள். (219)

என்று இவ்வகை சொல்லி அங்கு நின்று விடைகொண்டு போந்து விருத்தகிரி என்னும் மால்வரை யேறி அங்குள்ள தீர்த்தங்களை யாடி அங்கு நின்றும் போய் யாது கண்டார் பாண்டவர்,

நிற்ப, யாது செய்தான் பரமேசுரன்.

பாற்கடற்கே போமின்னீர் பஞ்சவர்கள் மற்றவன்றன்
சேக்கையது வென்று சிறந்துரைத்து—நோக்கி
அருந்தார மெய்தினீ ரவ்வரைமே லாறி
இருந்துபோ மென்றா ரினிது. (220)

என்பது, நீங்கள் வைகுண்டத்துக்குப் போகின்றீராகில், அதிதூரம் நடந்து பெருக்கத் தளர்ந்தீர். ஒளிர்மலையிலிருந்து இளைப்புத் தீர்ந்து போமென்னத் தன்மபுத்திரன் சொல்லுவான்.

நாங்கள் சாலநாள் உண்டு ஸ்ரீ வாசுதேவன் ஸ்ரீ பாதம் காணாதொழிகின்றது. ஈண்டன்புடன் போய்க் காணவேணு மென்கிற தாபமொழிய[ந்து] வேறொரு தாகமில்லை. எங்களுக்கு விடை தந்தருள வேண்டுமென்னத் [திரிநேத்திரனும்] விடை கொடுத்தருள, ஆங்கு அவனைத் தெண்டன் பண்ணி அங்கு நின்றும் போய்ப் பூசலிதமென்னும் பருபதமும், குமுதமென்னும் பருபதமும், மாலுச்சியமென்னும் மகாவனமும், மண்ணகை என்னும் மாலியாறும், புட்பதல

மென்னும் பருவதமும், இந்திரவியான மென்னும் பருபதமும், கடந்து செல்லா நின்றார். அவ்விடத்து யாது கண்டார்.

கலிபுகுந்து காசினியைக் கைக்கொள்ளக் கண்டு
நலியு மிவனென்று நடந்தார்—புலியொன்று
பொங்குசினப் போர்வையாற் றான்தீர வந்தே
அங்கு சினத்தோ டழன்று. (221)

இவ்வகை மகா வனத்தூடே போகின்ற பாண்டவர் மேலே ஒரு மகாமிருகம் நடந்து வந்து தன்மபுத்திரனைப் பிடிக்கக் கண்டு நெருப்பெழ விழித்து வீமசேனன் யாது செய்தானோ எனில்,

சினவேங்கை தன்மன்மேற் செல்வதனைக் கண்டு
கனவேங்கை யைப்பிடித்துக் கையால்-புனவேங்கை
பொன்று —... தாக்கும் புனல்னாடன் மற்றதனைக்
கொன்றுகளைந் தார்த்தான் கொதித்து. (222)

இவ்வகை அதன் காலிரண்டையும் பிடித்து நரசிங்கம் இரணியனைப் பிளந்தது போலப் பிளந்து, போடலும் யாது நிகழ்ந்ததோ எனில்,

ஆற்றற்கரிய விறல் வேங்கை யப்பொழுதே
தோற்றமுள வேதியனாய்த் தோன்றினான்—கூற்றனைய
வீமனையே நோக்கி மிளிர்ந்து முன்னின்றான்
காமனையே போலக் கரந்து. (223)

அதுகண்டு வீமசேனன் யாது சொன்னான்.

வேதியன் றானாகியநீ விண்ணின் மிசைஎழுந்தின்[று]
ஆதி குருக்க(ள்) அடிபணிந்தாய்—பூதலமேல்
புல்லியனாய் வந்து புலியுருவங் கொண்டநெறி
சொல்லியிடர் வென்றான் துணிந்து. (224)

என்பது, நீ யாரென்று கேட்ப யாது சொன்னான் பிராமணன்.

ஆற்றல் மிகப்பெரிய அங்கிமான் புத்திரனென்
தோற்ற முடைய சுதனானென் – மாற்றரிய
மெல்லியலார் காரணத்தால் வெங்கான வேங்கை
ஒல்லையுழல் செய்தே னுழன்று. [225]

என்பது, நான் இராசவிருடி அங்கிமான் புத்திரன், என் மாதா, பிதாக்களுடன் முனிவு, உண்டாகி அப்போ மாசென்னியனுக்குச் சுச்சயம் பண்ணிநின்ற காலத்து மகாவிருடி பத்தினி, விமலாக்கினி என்பாள் என்னைக்கண்டு, காமபூதயத்தளாய் ஏகாந்தமாயிருப்பதொரு தடாகத்துப் புட்பங் கொய்ய நிற்ப மற்றவளும் வந்தென் கரதலங்களைப் பற்றிக்கொள்ளுதலும் யானும் உடன்பட்டு மனங் கூர்ந்து. பின்பு புட்பங்கொண்டு தாழ்ந்துசெல்ல மகாவிருடியும் கோபித்துத் தாழ்த்ததென்னென்று கேட்ப யானும் சேதியைச் சொல்ல, மகாவிருடி சொல்லுவார்.

* * * *

.......சொல்ல, மூவருமே போனார் பருவரைமேல்......

வண்டுசேர் தாரார் மகிழ்ந்து......

இவ்வகை வடக்கு நோக்கிப் பல பருபதத்தின் மேலேறி அங்குள்ள தீர்த்தங்களை ஆடிப் பின்னும் பல பருபதங்களும் கடந்து வீமலோகமென்னும் மாலியாறுங் கடந்து வடக்கு நோக்கி நூறு யோசனை போயினார் என்றவாறு.

மஞ்சு தவழ்மணி வரைவாய் மாமரங்கள்
கிஞ்சுகம்போல நின்றலர்ந்து கேழ்கிளர – அஞ்சா
அளிக்குலங்கள் பாடியிட அச்சுதனென் றோதும்
கிளிக்குலங்கள் கண்டார் கிளர்ந்து. (226)

இவ்வகை நாராயணன் கிருபைபோல மகா விருட்சங்கள் போதலர அதன்மேலே வண்டினங்கள் இசையாடக் கோகுலங்கள் அதுகூவக் கிஞ்சுகங்கள் வாக்கியத்தால், கெழுமொழி

---

189-வது ஏடு இல்லை.

கள் கிளைக்கட்ட மயிலினங்கள் நடம் பயிலப்படியிருந்துள்ள பர்வதத்தையும், தீர்த்தங்களையும் கண்டு பிரியமெய்தி அங்கு நின்றும் போய்ச் சிலாதலமென்னும் பர்வதங் கண்டார். அதன் பொலிவும் யாதோ எனில்,

சந்தனமும் குங்குமமும் சாதிகையு[ஞ் சுற்றுங்]
கந்தமலி யுஞ்சோலைக் கற்பகமும்—முந்திமிக
எங்குநிறைந் தோங்கி எழிற்சிறப்பாய் நின்றதே
விந்தமணிச் சோலை வளம். (227)

அந்தப் பருவதத்தேறி அதன் பொலிவும் நோக்கி அங்குள்ள தீர்த்தங்களையாடித் [தவியா] ஒரு விருட்சத்தின் கீழிருப்ப அப்பொழுது அர்ச்சுனனுக்கு யாது நிகழ்ந்ததோ எனில்,

பார்த்தனுக்கு வந்து பகலே இருளாகி
யாத்திரையும் செய்திங் கிடர்பலவாய்—மாத்திரைக்கண்
வெவ்வேறிடந் துடித்து மெய்யும் விதிர்விதிர்த்
தவ்வாறு துன்னிமித்த மாங்கு. (228)

அன்றியும்,

முன்னைவினை ஒழிந்து மும்மடங்கா லாய்ந்து
பின்னும் பொல்லாக்குறிகள் பெயர்ந்துழல் வாய்துன்னிக்
கிளர்வுற்ற சோலைக் குருநாடன் கேட்கத்
தளர்வுற்றான் தார்விசயன் றான். (229)

இவ்வகைக் காலுங் கையுங் குறைத்து விழியுங் குரலும் வேறாய்ப் பின்பு இயம தூதரியாது.. .........

* * * *

தாரு............ அரசேற்றிப் புட்பவருடம் சொரிந்து திவ்விய விமானம் ஏற்றிக்கொண்டு சங்குபேரிகை இடக்கை துந்துபி என்று சொல்லப்பட்ட பல்லியம் முழங்க ஸ்ரீ வைகுண்டம் புக்கான் அர்ச்சுனன் என்றவாறு.

---

192, 193-வது ஏடுகள் இல்லை.

## அர்ச்சுனன் மோட்சம் முற்றும்.

அப்பொழுது தன்மபுத்திரனும் விமசேனனும் அர்ச்சுனன் மேல் விழுந்து கிடந்து, பிரலாபிப்ப விமசேனன் யாது சொல்லிப் பிரலாபித்தானோ எனில்,

மண்ணுலகில் வாழ்வோர்தம் மக்களென்று பெற்றெடுத்து
கண்ணதனா லேற்குங் காதன்மை—நண்ணுவார்
வாள்விசயன் ஒப்பாரோ வென்றுமன மழிந்து
தோளின்மிசை அயர்ந்தான் சோர்ந்து (230)

அன்றியும்,

மஞ்சடுத்த மாளிகைமேல் மாத ரடிவருடப்
பஞ்சணைமேற் பள்ளிகொள்ளும் பார்த்தனே—அஞ்சா
விடலே[று] ஒப்பான் விசயனே இங்ஙன்
நெடுவரைமேற் பள்ளிகொண்டாய் நீ. (231)

இவ்வகைப் பிரலாபித்துப் பின்னும் யாது சொல்லிப் பிரலாபித்தான் வீமசேனன்.

அபிமன் முதலாய அதன்பின்னே மாண்டோ[ர்]
உபயகுல வேந்தருளாற்..........தாபமடி...
என்றோ துரோபதையு மேலோரையு மிழந்தோம்
இன்றோ வினையோ மியாம். (232)

என்பது, அபிமன்யு முன்பு பட்டுவீழ்ந்த பின்பு மாண்ட நங்குலத்திராசாக்களும், துரோபதை குமாரரும் மாண்டார்கள். இன்றென்று தன்மபுத்திரன் ஸ்ரீபாதங்களைப் பூண்டுகொண்டு கிடந்து எம்பிமார் அர்ச்சுனர், நகுலர், சகாதேவர், நமக்கு முன்னே, மகாவிந்தம் சேர்ந்தார்கள். இனி நமக்கு யார் உத்தர கிரியையும், சாந்தியும், நடத்துவாரென்றும், எம்பிரான் அன்றி நாம் எங்ஙனே உயிர் வாழ்வோமென்று எல்லை இல்லாததோர் துக்கமெய்திப் பிரலாபிக்கின்ற வீமசேனனை நோக்கித் தன்மபுத்திரன் தேற்றுவான்.

பூலோகத்தில் நாலா பக்கத்தாரில் விதியை வென்றிருப்பார் ஊரோதுபவராய், அநேகங் காலமிருந்த நம் மூதாதையாகிய ஸ்ரீ பீஷ்மனுக்கு மரணம் வந்தது கண்டால் பின்னை நிச்சயமுண்டோவென, நாம் கிலேசிப்பதெப்படி என்று தன்மபுத்திரன் தேற்றத் தேறியிருந்து தன்மபுத்திரனை நோக்கி வீமசேனன் சொல்லுவான். அர்ச்சுனன் ஸ்ரீ வாசுதேவற்கு அந்தரங்கமானவன், இவன் நினைத்தது எம்மட்டாக இருக்கின்றது, ஸ்ரீ வாசுதேவ அநுக்கிரகமாய் ஆவதற்கும் வெல்லற்கரிதாயிருக்கின்ற அர்ச்சுனன் மாண்டபடி எப்படியோவென்று கேட்பத் தன்ம புத்திரன் சொல்லுவான்.

குருவாகிய துரோணாசாரியனையும், குரவனாகிய கன்னனையும், நம் குடிக்கு மூதாதையாகிய ஸ்ரீவீட்டுமனையும் கொன்றதினாலும், பூர்வ விதியினாலும், ஆகத்தகும் கண்டாய் என்று தம்பியைத் தேற்றி அர்ச்சுனனுக்குக் கிரியையும் நடத்தி, அங்கு நின்றும் போய், மைநாக பருவதத்தையும், குமுதமென்னும் மாலியாற்றையுங் கடந்து யாது செய்தார்.

விசயனுந் தம்பியரு மெல்லியரு மாங்கே
விசையொழிந் தடுஞ்சுரத்தை விட்டு—விசையுடைய
தம்பியொடு மாங்கே தடவரைமேற் போயினான்
வம்பவிழுந் தாரா னவன். (233)

இவ்வகைத் தம்பிமாரையும், துரோபதையையும்வனத்திடையே விட்டுத் தாங்களிருவரும், இனம் பிரிந்த யாளி, களிறு போலப் போகா நின்றவிடத்து நூற்று ஒன்பது யோசனை சென்று அப்பால் சந்திராசலி என்னும் மாலியாறும் கண்டு அதிலே அர்ச்சுனற்கு உத்தரகிரியையும் நடத்தி மற்றும் வேண்டுவன செய்து பின்னும் நாற்பது யோசனை போய் ஏமபருவதத்தைக் கண்டார் என்றவாறு.

குன்றத்தின் தன்னுடைய சோதியாக் கோவேந்தர்
பொன்னொத்த மாமேனி போன்றார்கள்—மின்னொத்த
பாங்கா மிருகம் பறவைபல வெல்லாம்
[நீ]ங்கா வரைகளெல்லாம் நீர்த்து. (234)

அவ்விடத்துக் கோகிலங்கள் நிலையை யாதாயிற்றோ வெனில்,

கண்ணனே என்றுங் கடல்கடைந்தா யென்றும்
அண்ணல் திருநாம மடையவே—வண்ணம்
கரியோனே என்றும் கருங்குயிலி னங்களெல்லாம்
பிரியமாய்க் கூறும் பெயர்ந்து. (235)

இவ்வகை குயிலினங்களும், குருகினங்களும், மற்றுமுள்ள பறவை இனங்களெல்லாம் திருமால் திருநாமங்களே சொல்லிக் கூப்பிடா நிற்பக் கேட்டுத் தன்மபுத்திரனும் தம்பியும் பெருக்கச் சந்தோசித்துப் பின்னும் மாலியாறுகளும் பர்வதங்களும் கடந்து போயினார் என்றவாறு.

அப்பொழுது கின்னரமென்னும் பருவதமுங் கண்டார். அதெவ் வகையோ எனில்,

மாம்பொழிலின் பாடணைந்தும் வான்கமுகின் பாடுரிஞ்சிப்
பூம்பொழில்க டானெங்கும் பொய்கையாய்த்—தேன்பாய்ந்த
தென்றல்வந் தூடாடும் செழுவரையிற் சென்றார்கள்
மன்றல்தங்குந் தாரார்கள் வந்து. (236)

இவ்வகைப் பல பொய்கையு முடைத்தாய்ப் பருவதங் கண்டு அதிலுள்ள தீர்த்தங்களையாடி வடக்கு நோக்கிப் போகா நிற்ப, இவர் முன்னே ஒரு தனியாய்ப் பன்றி வந்து அடர்தலும் அதனைக் கண்டு யாது செய்தான் வீமசேனன் காலிரண்டும் பற்றிக் கழுத்தைத் திருகி மிகு, மாலுருமியோடி முன்.......

*   *   *   *

......மா, லுருவாய்த் திரி என்றான் தேர்ந்து என்பது. ஓகாரந்தன் என்னும் மகாவிருடிக்குச் சீடன் நான், மீதென் என்னும் பேருடையேன் யான். சந்தன வனமென்னும் பர்வதமேறி ஆகுதிசெய்ய விருப்ப, அவற்குப் புட்பமும், சமிதையும் எடுத்து வரும் வழியில் இரண்டு வராகம் தம்மிற் கருவித்துப்

---

199 வது ஏடு இல்லை.

பொருகின்றன கண்டு பார்த்து நின்று வரவு தாட்ப. மகா இருடியும் கோபித்துத் தாழ்த்ததேனென்று கேட்ப, யானும் புகுந்ததெல்லாம் சொல்லி நிற்ப நீயும் போய் இவ்வனத்தே கேழலாய்த் திரி என்று சபிப்ப யானும், சாபமோட்சம் என்னென்று கேட்பப் பாண்டுபுத்திரன் வீமசேனன் மகாவிந்தம் வருவனவன் கையால் மாண்டால் உனக்கு மோட்சமென்று சொன்னான். அப்படியே பிரானே உன்னாலே மோட்சம் பெற்றேனென்று நமஸ்கரித்து நிற்ப, அவனுக்கு விடைகொடுத்து வடக்கு நோக்கி நூற்றுமுப்பது யோசனை சென்றார் என்றவாறு. அப்பொழுது ஆதித்திய பகவான் யாது செய்தான்.

## சூரிய அத்தமன வருணனை!

வையகத்து வெண்கதிர்கள் தான்சுருங்கி மாத்தாண்டன்
பையவே மேற்கடலிற் பாய்ந்தொளித்தான்-மைவரைமேல்
பாலாழி ஆயன் பதந்தேடும் பாண்டவர்கள்
காலாறு வண்ணங் கடிது. [237]

என்பது ஆதித்திய பகவானுதய மத்தமிப்பத் தன்மர், வீமரும் போய் ஒரு இருடி இருக்கின்ற ஆச்சிரமத்தில் சென்று புகுந்து இருடியை நமஸ்கரித்து நிற்ப அவனும் *சுவாகதம் சொல்லி ஆசனங் கொடுப்ப இருந்து .... .. முன்பு விசேஷமெல்லாம் இருடிக் குரைப்ப அவ்வளவில் ஆதித்தியனும் உதயபர்வதத்தே தோன்றினான்.

......... ள, படாகம் போட்டு மண்டலம் விளங்க உறுதலும் பாண்டவரும் இருடியை நமஸ்கரித்து விடைகொண்டு

............... ச, சயிற்றிறம் என்னும் பருப்பதமும் கவுலிதமென்னும் பருப்பதமும் கடந்து இருநூற்றொன்பது யோசனை கடந்த விடத்து வீமசேனனுக்கு யாது நிகழ்ந்ததோ எனில்,

---

*வரவேற்கும் மொழி.

நாயி றிரண்டாதி ஞாலம் பலவாகி
ஏயுந் தடந்தோளு மிடந்துடிப்ப நாவறண்டு
†ஓரிக் குரலு மொருகோடி யாயிற்றே
மூரித்தோள் வீமன் முகம். (238)

அப்பொழுது தன்மபுத்திரனை நமஸ்கரித்து யாது சொன்னான் வீமசேனன்.

*ஒன்னலர்கள் நம்மே லுளதாகத் தான்கூடும்
என்றனக்கு மின்னே இடந்துடிக்கும்—விண்ணதிரும்
பொன்குறிகள் மீன்பகலே வீழ்ந்தெய்துந்
துன்னிமித்தம்................. சூழ்ந்து (239)

இவ்வகை வீமசேனன் சொல்லி நிற்பத் தன்மபுத்திரனுக்கு மப்பரிசே நிமித்தம் எவ்வகையோவெனில்,

உனக்கிளைய வீமன் (உயி)ரிழந்து நீயும்
வனத்திடையெ ன்றி னி ழையு(ன்னா)
... .. .......... னத்துவன் [240]

* * * *

- ....... போக்கிவிட்டுத் தனித்தோம். இதனிலும் சில உண்டோ துன்பமும் ஏன் என்று, தன்மபுத்திரனைத் தேற்றிக் கொண்டு போமளவில் யாது செய்தான் யமராசன்.

புன்புனல்க ளாங்கே பொறியப்போ தெனவத்
தென்புலத்தோன் தூதாச் செறிந்தடர-அன்பினால்
கூசவகை யன்றிக் கொடுங்காலன் தோன்றிப்
பாசமங்கை யிற்பகிர்ந்து தான். (241)

இவ்வகை யமராசன் சூலமும் பாசமும் பிடித்துத் தூதர் முன்னும் தான் பின்னுமாக வந்து வீமசேனன் உயிர் வவ்வ, அதற்குச் சமைந்து தோன்றி யாது செய்தானோவெனில்,

---

† ஓரிக்குரல்— நரிக்குரல்.
*பிரதியிலிருந்தவாறு எழுதப்பெற்றது.
203-வது ஏடு இல்லை.

சாரவருவன் தழல் விழியன் தாங்கரிய
மேருவரை போல மிகவடர்வன் கார்வரிய
கூரெயிற்றைக் காட்டுங் கொடுஞ்சூலம் தான்சுழற்றும்
சீரையுற்ற வீமன்மேற் சென்று. [242]

இவ்வகை யமராசன் வந்தடர்தலும் யாது செய்தான் வீமசேனன்.

கனல்விழித்துச் சீறிக் கடுங்கோபங் கொண்டு
சினவெயிற்றுக் கால னெதிர்சென்றான் முனையிற்ற
வெற்றிகொண்டான் வீமன் வினைசெய்ய வேதுணிந்தான்
நெற்றிவிழி யான்*செயற்கு நேர். (243)

என்பது, வீமசேனனும் †யுத்தம் தொடங்கி, அனலை விழித்து ஆரவாரஞ் செய்து யமராசன் எதிர்செல்ல அவனும் அஞ்சி அகலநின்றும் பின்தொடர்ந்து முன்தொடர்ந்தும் சாலவும் தூரப்போகான் சாலவு மணுகவாரான் இவ்வகை நடந்து செல்ல இருவரும் யாது செய்தார்.

* * * *

பிடிக்க நினைந்து பெருங்காலன் செல்லு
மடிக்கநினைந் தஞ்சா தணுகும்—வடிக்கண்ணார்
வினைகளெல்லா மறுத்துச் செறுத்துப் போய்
வைகுந்தஞ் சேர்ந்தினி வாழ். (244)

அது கேளாய் வீமசேனனே உனக்குப் பழவினைகள் பலவுமுண்டாதலால் அண்ணல் நாராயணசுவாமியைத் துதி பண்ணிச் சென்று வைகுண்டம் சேருதி என்று மகனுக்கு ஞான உபதேசம் பண்ணிப்போயினான் வரதராஜன்

அப்பொழுது உபதேசம் தலைமேற்கொண்டு தன்மபுத்திரனை நமஸ்கரித்து பின்னை தேவனை ஸ்ரீ புருஷோத்தமனை அசுரர் தேவனைத் துதிபண்ணினான் அது எங்ஙனமெனில்,

---

206-வது ஏடு இல்லை. *செயல்போல் மூ. பாடம்.
†'உயிறறந்துடங்கி' மூ. பாடம்.

எட்டெழுத்து மோதி இணைக்கரங்கள் தான்கூப்பி
மட்டவிழுந் தண்டுழாய் மாலென்றே - எட்டிசைக்கும்
நீயல்லாதில்லை நெடியோனே இன்றி யமன்
போயல்லல் செய்யாமற் போக்கு. (245)

அன்றியும்,

நரசிங்கமாகி நதைத் தவுணன் மார்பத்
துரைசுருங்க உள்ளக் குரலூன்றி—அரசவன்றன்
பாலனுக்கே அன்றளித்த பச்சைத் துழாய்முடி[யாய்]
மாலவனே நீயேஎன் வைப்பு. (246)

அன்றியும்,

வெள்ளைச் சுரிசங் குடன்வந்த நேமிவலம்
புள்ளைக்கா டங்கும் புயல்வண்ணா—கள்ளத்தால்
வெண்ணையொளித் துண்டோனே வேழமருப்பொசித்தாய்
அண்ணலெனக் காவா யருள். (247)

இவ்வண்ணந் துதிபண்ணா நின்ற வீமசேனனைக் கண்டு ஸ்ரீ புருஷோத்தமன் அடியாருடன் நமக்குப் பணி அல்லவென்று காலன் விட்டகல தேவர் வசுக்கள் யாது செய்தார்.

மேகம் நிழலெடுப்ப மின்னித்துளி தெளிப்ப
ஆகமதி மாருதக்கோன் வந்தசைப்ப—வாரி
மலர்தூவிப் பல்லாண்டு மங்கையர்கள் கூற
சிலர்துறந்து கொண்டெழுந்தார் சென்று. (248)

இவ்வகை வீமசேனனைத் தேவகுமாரரும், தேவ ஸ்திரீகளும், புட்ப வருஷம் பொழிந்து பொற்சிவிகைமீது வைத்து

நிறைகுடமும் நிறைவிளக்கும் முளைப்பாலிகையுங் கொண்டு ...... போலக்......

* * * *

கார்வரை மேல் வேந்தனும் கண்
டாற்றான் மிகவெறுத்துப் போந்தவினை—யாற்றாமல்
அற்றறிந்தது கொல் பாவிஎன........
சுற்றமிழந்தேனன்றோ தொக்கு. (249)

என்பது. காந்தள் அலர்ந்தது கைவிரித்தல் போன்றது கண்டு, நான் சுற்றமிழந்து போகின்ற[து கண்டு]தற்குக் கைவிரித்தீரோ வென்று உற்றுப்பாராமல் அப்பால் போயினான் தன்மபுத்திரன்.

தாங்கரிய பெருந்துயரந் தானுழன்று
பாங்கெலாம் சிந்தை பரந்தலைப்ப—நீங்கிப்
படர்கானந் தானகன்றான் பார்வேந்தன் முன்னே
இடராம் வினைகூர்ந் திட்டு. (250)

இவ்வகைச் செல்லாநிற்பக் குயிலினங்கள் கூவுகின்றது கண்டு யாது சொன்னான் தன்மபுத்திரன்.

மானக் கதிர்வேல் மன்னவன்றன் முன்னே
கானக் குயிலினங்கள் கலந்தழைப்ப-மானத்தோ(டு)
எம்பியரை இங்கே வரக்கூவு மென்றுரைத்தான்
தம்பியர்போ கூறித் தளர்ந்து. (251)

என்றிவ்வகை குயிலினங்கள் கூவக்கேட்டுப் பெருந்துக்கமெய்தி என் சுற்றத்தாரை வரக் கூவாய் குயிலே என்று புலம்பி, ஆரணியத்தூடே போய்ப் பருபதங்களும், மாலியாறுகளும் கடந்து கலகமென்னும் பருவதத்தையுங் கண்டு போகாநிற்பச் சண்பக மலர்ந்ததுகண்டு அதனருகில் தும்பிகளைக் கண்டு யாது சொன்னான் தன்மபுத்திரன்.

வம்பவிழ்தார் சண்பகத்தின் மாமலரிற் றாதுண்டு
தும்பிகடா மங்கே தொடர்ந்தோடத்—தம்பியர்கள்
தனக்கென் னிலைஎல்லா மியம்புமின்க ளென்றுரைத்தான்
*மின்னுலகெண் கூர்ந்தளைவெல் வேந்து (252)

209-வது ஏடுமுதல் 215-வது ஏடுவரையுமில்லை.

இவ்வகைச் சொல்லிப் போகாநின்ற தன்மபுத்திரனுக்கு ஆதித்திய பகவான் யாது செய்தான்.

பார்வேந்தர் வந்து பணிந்திறைஞ்சிப் பாரின்மேல்
தார்வேந்தன் துக்கந் தனைக்காணா — நீரோத்த
பாற்கடலிற் றோன்றும் பரிதி ஒளிமழுங்கி
மேற்கடலிற்சென் றணைந்தான் வெற்பு. [253]

இவ்வகை ஆதித்தியனும் அத்தமன பருவதஞ் சார்ந்தான். தன்மபுத்திரனும் மகாதுயரத்தூடே ஒரு வடவிருட்சத்தின் கீழிருந்து நித்திரைகொள்ள அதன்மேல் வாழ்வதொரு மாநாகம் பல் வாயால் வளைத்து யாது செய்ததோ எனில்,

† பெரிது மிரையொன்று பெற்றோமென் றெண்ணி
அரசன்றன் ... ... ....
.. ...மன் கண்டான் கலிந்து.

* * * *

என்பது தன்முன்னே வந்து நின்ற புருஷமிருகத்தினைச் சந்தோஷித்துப் பின்னை அதிசந்தாபத்தனாய் விம்மிவிம்மித் துக்கமெய்தி நின்ற தன்மபுத்திரனை நோக்கி யாது சொல்லிற்று புருஷ மிருகம்.

எந்தோழ னெம்பியர்பேர் சொல்லி இடருறுநீ
வந்தாயிங் கேதோ வரவென்ன — முந்த
அறிந்தீர் போல்நின்றீ ரார்கொலோ வென்றான்
பரிந்தோ ராமிருகம் பன். (254)

என்பது, வீமார்ச்சுனர், நகுலர், சகாதேவர் பேர் சொல்லு கின்றாய். நீ யாரென்று நிரூபிக்கப் போகின்றதில்லை. பயப் படாதே. நின்னை உள்ளவாறெல்லாம் உரைப்பாயாகென்று புருஷமிருகம் கேட்பத் தன்மபுத்திரன் சொல்லுவான்.

---

*இவ்வடி இருந்தபடி எழுதப்பட்டது. † இப்பாடல் முற்றுமில்லை 218-வது முதல் 223-வது ஏடு முடிய இல்லை.

யான் குருவம்சத்துத் தன்மபுத்திரன் என்பதறியாயோ. நீ என் யாகத்துக்கு அத்தினபுரத்துக்கு வந்தாய், நீ என்னை அறியாயோ என்று தன்மபுத்திரன் கூறக் கேட்டுக் கனத்த வியாகுலமாய் யாது சொல்லிற்றோ எனில்.

*  *  *  *

..............த் தொண்ணூறு யோசனை கடக்கில் அக்கோணம என்னும் பருவதமுண்டு. மற்றதனைக் கடந்துபோய், ஸ்ரீ கேதாரத்தைக் காண்பாய் ஆகென்று பின்னும் யாது சொல் லிற்றோ எனில்,

குருக்கள் குலபதியே கோவேந்தர் கோவே
திருக்கேதா ரத்தளவுஞ் சென்றால் – நெருக்கியோர்
புள்ளதனை யூர்கின்ற போற்றுகழல் மாயவனை
உள்ளவா றெல்லா முணர். (255)

இவ்வகைச் சொன்ன ஸ்ரீவாசிகம் யாது சொல்லிற்றோ எனில்,

சிவனுடைய மெய்யடியென் செவ்வாய்ப் பவளத்
தவளநகைத் தையல் மாதே—இவளுடைய
சொல்மிழற்று மஞ்சொற் சிறு கிளியை(யான்)
கொல்லமுனிந்த சாபமது தான். (256)

என்பது யான் பகவான் அடியேன்பால் பதிபரமேசுரி ஒரு கிளி வளர்த்தாளதனைப் பெறுமயக்கத்தாலே கொன்றேன். பார்பதி முனிந்து கிளியைக் கொன்றாய், நீயுங் கிளியுருப் பெறுவாய் என்று சாபமிட, அன்றுமுதல் அப்படியேதிரிகின்றேன். இப்பொய்கையும் என்னதே, யாவரும் என்னை நலிவாரில்லை, நானும் விட்டுணு லோகத்துப் போய் இப்பொழுது வந்தேன். நீயும் ஸ்ரீகேதாரம் செல்வாய்ஆகென்று சொல்லக் கேட்டுத் தன்ம புத்திரன் சொல்வான்.

நீ, விட்டுணு உலகத்தினின்றும் வந்தாயாகில், நீ விட்டுணுவைக் கண்டறிவையோ வென்ன, ஸ்ரீவாசிகம் யாது சொல்லிற்றோ வெனில்,

---

*225 முதல் 235 வரை ஏடுகள் இல்லை.

வண்டாருந் தண்டார் துழாயலங்கள் மாயவனைக்
*கண்டேனவன் வடிவுசொல்வி யரற்றிவிழக்-கண்டு

புருஷமிருகம் தன்மபுத்திரனை முகத்தைத் துடைத்துப் பின்னும் யாது சொல்லிற்றோ எனில்,

தன்மபுத்திரனே, உன் தன்மசீலம் தலையழிய இவ்வாறு செய்தாரை மூலமறக்கொள்கத் தவிர் என்று கொதித்து யாது சொல்லிற்றுப் புருஷமிருகம்,

மன்னாவுனக் கிளையார் வானடைய நீகான் பாய்
இன்னாது செய்தார்மற் றியாவர்தான்—முன்னாளில்
பாருனக்கே யாக்கிப் பகைகெடுத்து நான்றருவேன்
நேருனக்கு முண்டோ(தா) நிலத்து. (257)

நின்னை இவ்வாறு செய்தார் யார் என்று சொல்லுவாய். அவர்களை என் எயிற்றுக்கிரையாக்கி நின் முடிசூட்டிச் சத்த லோகமும் இராச்சியமும் செலுத்துவிப்பன், நீ ஏதும் இடருற வேண்டாமென்று வடவாமுகாக்கினிபோலக் கனன்று நின்று பின்னும் யாது சொல்லிற்றோ எனில்.

காற்றோ மலையோ கடலோ கனலோதான்
கூற்றோ உரையென்று கோபித்துத்—தோற்றக்
கலியெனக்கு *மானதோ கட்டுரையா யென்றான்
வலிதனக்கொன் றில்லா தவன். (258)

என்றிவ்வகை புருஷமிருகம் சொல்லக்கேட்டு யாது சொன்னான் தன்மபுத்திரன்.

பூந்தாவும் காவும் பொருப்பும் புடைகாத்த
மாந்தாதா என்பவனும் வானடைந்தான்—காய்ந்த
இரணியனைப் பிளந்த மாயனெம் பெருமான்
சரணகமே என்றனக்குச் சார்பு. (259)

---

*கண்டென்வன வடிவு குறைப்பாடல் மூ. பாடம்.

என்பது. உன்னைப்போல தைரியவான்களும் சத்தியவான் களுமில்லை. யாங்கள், நாராயணன் பணி மறுக்கலாகாது, ஆதலால்,

நாராயணசாமி சரணார விந்தங்களே எமக்கு ராச்சியங் கண்டாய். பூலோகத்துக்கு ஸ்ரீமத் துவாரகாபதிக்கே இருந்து துஷ்டநிக்கிரகம் செய்து புலியும் புல்வாயும் ஒரு துறையிலே நீரூட்டினாரும், மாந்தாதர்வும் பலரும் மாண்பெய்தினார், அவரும் சுகத்தே அனுபவித்துக் கன்மபூமியில் மரணமின்றியே இருந்தார் யாவருமில்லை கண்டாய். யான் இனிக் கன்ம பூமியில் இருப்பனல்ல னென்று தன்மபுத்திரன் † ( ‡ பாலியபடியே. பஞ்ச இந்திரியங்களும் போதியானின்றன. யான் சொல்லும் வண்ணம் ஏதென்று தன்மபுத்திரன் கூறக்கேட்டு யாது சொல்லிற்று ஸ்ரீ வாசிகம்.)

செங்கோல் திசைநடப்பத் தேர்வேந்தர் தற்சூழச்
சிங்கா தனத்திருக்கும் சேவடிகள்—துங்கமத
மத்தகத்து மேலிருந்த மன்னவனே மாலவனாய்
இத்திசைநீ வந்தவா றென். (260)

இவ்வகை நீ மகாவிந்தம் போந்த வழிகள்தோறும் அதி பலவான்களாகிய தம்பிமாரையும் இழந்து உன் உற்றாரையும் இழந்து இராச்சியத்தினையும் துறந்து பருவதங்களும் மாலி யாறுகளும் கடந்து வருந்தி நின் பாதங்கள் அத்திப்பழத்தை ஒத்திருந்தனவென்று பின்னும் யாது சொல்லிற்றோ எனில்,

தேவர்.......பணிகேட்பத் தேர்வேந்தர்[சூழக்]
காவலனாய்ப் பொய்கைதளைக் கைக்கொண்டு—யாவற்கு
மேலாக வீற்றிருப்பா யென்றுரைத்தான் மெய்வருந்த
மாலாகிச் செல்வானை வந்து. (261)

---

* மான்றோதான் மூ, பாடம். ‡ பால்லியபடியே மூ. பாடம்
† இதற்கடுத்த ஏடு இல்லை.

என்பது. இங்குனக்கு வேண்டினவெல்லாம் தலைக்கட்டிக் கோமேதகத்தால் மாட கூடப் பிரசாதங்களும், விசுவகன்மாவை அழைத்து இங்கே உண்டாக்கித் தருவென, இங்கே இருமென்று ஸ்ரீ வாசிகம் சொல்ல யாது சொன்னான் தன்ம புத்திரன்,

வேதனையும்வேத விதியினையு முன்னை வரும்
தீவினையுந் தீர்க்குந் திருமால்காண்—போதுலவு
பொற்றா மரைப்பாத மல்லாது பூதலமேல்
மற்றேதும் வையா மனம். (2?2)

என்றிவ்வகைச் சொல்லி நீ முன்னம் உபதேசிக்கப்பட்ட ஸ்ரீ கேதாரமே போகின்றேன் என்று போமளவில் நாராயணசாமி பாதகமலம்.

மேகங்களோ வென்றி வெய்யகதிர் விட்டெறிப்ப
......ள்ளதீந்து மழைதானு மன்றி—நாகங்கள்
மெய்யுயிர்க்கு மன்ற வியன்கானஞ் சென்றடைந்தான்
..........ற் தாயகக் கோ .......... (263

இவ்வகை ஆதித்த கிரணத்தால் வல்லிசாதிகள் வேறுபட்டு நாங்களும் நீ..............நரகத்திலே ஒடுங்குகின்ற கானத்தை ஒருவகையாற் கடந்துபோய்ச் சேர்ந்து அங்குள்ள தீர்த்தங்களையாடி அங்குநின்றும் போய்க்கோணம் என்னும் பருவதங்கண்டு,

காணி என்னும் மாலியாறுங்கண்டு யாது செய்தான் தன்மபுத்திரன்.

$சங்கு வீரமு மங்கேமாளிகைமேல் செங்கமலங்
காட்டித் திருமுகங்க ளங்கே அணிப்பாலிகை
... தன் மணப்பாறை மேலிருந்தான் வந்து. (264)

---

ஈற்றடி இல்லை, 2-வது முதற் சீரில்லை. குறைப்பாட்டு இருந்தவாறே எழுதப்பெற்றது.

§ இப்பகுதி பாட்டிடை விரவியதுபோலக் காண்கிறது.

† நுறை மூலபாடம். ‡ துற்றான் பாடம்.

இவ்வகை இத்தின மருங்குண்டாகிய மணிப்பாறை மீதிருந்து இளைப்பாறி யங்குநின்றும் போய்த் தெய்வசாரமென்னும் மாலியாற்றைப் பாலனியாய் இருமருங்கும் நந்தவனமாய்ப்பதியாய்த் தோன்றத் தோர்பாங்காய், காணாது வீயாது சொன்னான்

அரவுயர்த்தோன் வஞ்சனைக்கு மாற்றாது முன்ன
மிரவுபக லெம்பியரு நானும்—அருவி ! ...
வெங்கானம் போன்றதே எனறென்று மெய் ! துற்றான்
தன்காலுடன் தளர்ந்து தான். (265)

இவ்வகை..... ............ பொக்கிஷத்துப் பின்னை வீமசேனனை நினைந்து யாது சொல்லிப் பிரலாபித்தானோ எனில்,

*நூற்றுவர்க ளென்று.... ...........ம்
பெரும்போது தன்னை ஏற்றச்—செருக்களத்திலீடழித்து
நாற்றிசையும் தோற்றம் படைத்தருளுந் தோள்வீமா
[தோ]னாற்றம் கரைவாய் வின். (266)

என்பது, பின்னும் அருச்சுனனை நினைந்து யா[ங்ங]னம் பிரலாபித்தானோ எனில்.

இத்தரை எல்லா மமர்க்களத்தி லாங்கே
எதிரெதிரே வில்லிறுத்த வேந்தாய்—அதிரதிரி
லோர்விசயன் முக்கணிறைவனொடும் போர்பொருதத்
தார்விசயா வென்றான் தளர்ந்து. (267)

அன்றியும்,

*மாற்றலர் பெரும்புகழாய்......மன்னவனே [மன்னவனே]
ஏற்றம்வல் வேந்தர் இளங்களிறே – கூற்றனைய
சீற்றத்தாய் தேவர்க்காய்த் தானவரைக் கொன்றடர்
[த்தாய்] (268)

---

* இவ்விரண்டு பாடல்கள் அடி பிறழ்ந்தும் தளைகள் சிதைந்துமுள்ளது. இருந்தவாறே எழுதப்பெற்றது.

பூலோகத்துக் கன்னியரும் தெய்வலோகத்துக் கன்னியரும் நாகலோகத்துக் கன்னியரும், திரள்திரளாகப் பொய்கையின் கண் நீராடவந்தார். அப்பொழுது தன்மபுத்திரனுந் துரோபதையை நினைந்து பிரலாபிப்பது கண்டு கன்னியர்கள் யாது சொன்னார்.

மானிடவர் வந்திங் கழுதா ரெனச்சொல்லி
கானமயில் போலுங் கன்னியர்கள்—ஆனதென்ன
அன்னநடை மடவா ராங்கவனைக் கண்டார்கள்
இன்ன தெனவுணர்வீ ரிங்கு. (269)

பஞ்சிதழி இணையார் பாரப் பணைமுலையார்
நஞ்சே அனையவிழி நன்னுதலார்—மிஞ்சுமயில்
சாயலார் பூங்குழலார் சார்ந்தார் தருமனைத்தம்
மாய முடனே அறிந்து. (270)

மற்றும் சிலர் எங்ஙனம் வந்தாரோ எனில்,

நாமேதான் சென்றங்கே நன்றுசொல்லி நன்கணைந்துளும்
தாமே யருகணைந்தார் தையலார்—பூமேவு
பொற்றா மரைமுகமும் பூண்முலையும் [பொற்றோ
நற்றா மரையடியார் நன்று. (271)

பின்னும் சிலர் எவ்வண்ணம் வந்தாரோ எனில்,

மாக்குன்றின் மீது மயிற்கணங்கள் வந்தாற்போல்
பூக்குன்ற மாலை புடைசரிய—நோக்கரிய
மையரிக் கண்மாதர் மன்னவர் கொல்[லென்ன]
பொய்கைதனிற் போயணைந்தார் புக்கு. (272)

அப்பொழுது தன்மபுத்திரனை நோக்கி யாது சொன்னார் கன்னியர்,

செய்ய .......... றுமா னிடவர் வடிவாய்
எய்தற் கரியவிட மெய்தினாய்—மையுற்ற
கன்னியரே நாங்கள் கா..........யே புகுந்திங்[கு]
உன்னியவா றெங்கட் குரை (273)

என்பது கன்னியர் வினவத் தன்மபுத்திரன் யாது சொன்னான்.

சேலெனுங்கட் கன்னியர்காள் செல்குதியோ எம்பியர்கள்
காலமே* செய்யக் கதறுகின்றேன்—பாலனைய
மென்மொழியீர் நீங்கள் விரைந்து வினவுங்கால்
என்மொழிகேட் டென்(ன) பயன். (274)

என்பது, நான் என் தம்பிமாரையும், துரோபதையையும் இழந்து புலம்புகின்றேன். நீர் என் மொழி கேட்டென்ன பயனென்று தன்மபுத்திரன் சொல்லக் கேட்டு யாது சொல்லுவார்.

நீயாருன் தம்பியார் நேரிழையார் நீவனத்தில்
பேயாக நின்ற ரற்றும் பேதைமைஎன்—வாயார
உள்ளவா றெல்லா(ம்) உரைஎன்றா ரோங்கோத
வெள்ளமாங் கண்மடவார் மீட்டு. (275)

எனக் கேட்டுக் கன்னியற்கு மறுமாற்றம் கொடாதே மதி மயங்கி இருந்து சிறிது தேறிப் பின்னை யாது சொன்னான் தன்மபுத்திரன்.

பாண்டவரில் மூத்தவனான் பாவைமீர் கேட்பீரே
லாண்டகையான் வீமாருச்சுனருங்-காண்டகுதோள்
வீரா விரட்டையரு[ம்] மென்சொற் றுரோபதையும்
சேர விழந்(*யானி)திருந்தேன் றேர்ந்து. (276)

*     *     *     *

சேர்ந்து கலவிக்கடலில் செக்கானஞ் சூழ்ந்ததிரு
முற்றாமுலைத் தடத்து மூழ்கினார் நின்றார்பால்
கற்றார்க ளன்றோ கலந்து. [277]

என்பது, இந்திரியங்கள் துறந்தார் யாவருமில்லை பூமி பாரந் தாங்குகின்றதும், அநேகந் தன்மதானம் செய்கின்றதும், அநுட்டான தர்ப்பணம் செய்கின்றதும், வேள்வியாகம் செய்தும். மகாதானம் செய்தும், வருந்துகின்றார். எங்களைப்போலும் தெய்வமாதர்கள் தனத்தட மூழ்கவும் ஆடல்பாடல் காணவும் கண்டாயென்றும், அதுவுமன்றியே சர்வ லோகத்துக்குஞ் சுவாமியாகிய பரமேசுரனுக்கு இரண்டு மாதர்களை நீங்கி இருக்கமாட்டாது பாதத்திலும் சேடர் முடியிலும் வைத்திருக் கின்றார். ஸ்ரீ நாராயண பகவான் திருமார்பிலே ஸ்ரீ தேவியையும்,

---

249-வது ஏடு இல்லை. *து-மூ. பாடம். யானி மூ. பாடம்.

ஸ்ரீ பாதத்திலே பூமி தேவியையும், கொண்டிருக்கின்றார். பிரமாதி தேவர் வாகேஸ்வரியை நாவிலே தரித்தும், சரசுவதியை அங்கையிலே தரித்துமிருக்கின்றார். தேவேந்திரனு மெண்ணற் கரிய தேவிகள் சேவிப்பவிருக்கின்றான். நீ சங்கு சார்க்கந் துறந்தோமென்கிற,

*     *     *     *

பொங்கு புனலாற தாய்..............
எங்கு மிருண்ட வனமுளதாய்—அங்கே
சிங்கமொடு புல்வாய் செறித்துநில...... தான்மேயு
மங்கு மலைகண்டா னவன். (278)

இவ்வகை, தொண்ணூறு யோசனை சென்று புத்தகிரி என்னும் பருவதங் கண்டு அதன்மேலேறி[யப்பட்ட] அங்கே காணப்பட்ட பகவத் கோயில் கண்டார், எங்ஙனம் துதித்தாரோ வெனில்,

தேடிவந்தேன் தாள்வேண்டி நிலமகன் பாரங்குறைய
விடாய் தீர்த்த கொம்பே—நெடியவரையில்
கஞ்சனுயிர் பிளந்தான்[றன்] தங்காய் கடுவினையேன்
நெஞ்சிலிடர் தீர்த்தருள்வாய் நீ. (279)

அன்றியும்,

*பொருகலையே மேற்கொண்டு போர்புரிந்து செங்கை
வருமயிடன் றன்சிரத்தை வாட்டித்—திருவடியை
மற்றதன்மேல் வைத்துகந்தான் தங்காய் வருந்தியவென்
குற்றமெலா(ம்) நீயே குறி. (280)

என்று துதிக்க எங்ஙனம் தோன்றினாள்.

*வாளொருகை தண்டொருகை வன்சூல – வில்லொருகை
நீளொலி சங்கினொடு நேமியுங்கையால் மருங்குற்ற செவ்வி
மதிகாட்டி ஆங்கேயருள் கொடுத்தாராயினு மாங்கு [281]

இவ்வகைப் பிரத்தியக்ஷங்கண்டு மற்றவன் திருநாமம் நூற்றெட்டுந் துதித்து நிற்ப அவளுவேண்......... (தன்மபு)த்திரன் வேண்டிக்கொள்வான். ஸ்ரீ நாராயணன் ஸ்ரீபாதகமலங்களை

251-வது ஏடு இல்லை.

............யீண்டி ............வரந்தருவாயென்னப் பிரசாதம் செய் தருளினான். அப்பொழுது,

*அங்கவள . வாந்த...... ...
...பொழுதே செங்கட்புலியுழலுந் திண்காட்
டிறத்துங்க மால் பொற்பாதஞ் சிந்(தித்து)
பொதி என்னு மந்தி (282)

இவ்வகை நற்பொதி என்னும் மாலியாறுங் கடந்தேறி யட்பால்......... கடந்து போகா நிற்பக் கெதவாகினி என்னும் பெரியாறு மண்ணும் விண்ணும்...... நின்றவிடத்து மாலியாற்றைக் கண்டு போக அரிதென்று தம்பிமாரை நினை .. கண்(ண)னைத் துதி பண்ணா நின்றளவில் அத்தன்மராசன் யாது செய்தான்.

“என்னுருவம் தான்கொண்டு சென்றா லப்பொழுது
மன்னவனு மாங்கே மயங்குமெனத்—தன்னுருவம்
பொல்லாச் சுணங்கனாய்ப் போகும்படி துணிந்தான்
எல்லா(*எங்கு)மவ னிற்கு மிறைவன்.” (283)

தன்மபுத்திரன் மனது சோதிப்பது பொருட்டாகத் தன்ம ராசனும் தன்னுருவம் மாறிப் பெற்ற வடிவில் ஒரு புழுத்த நாயின் வேஷங்கொண்டு சென்று யாது செய்தான் தன்மராயன்.

மின்னிவரும் பூணகையார் மைந்தர்தம் கோமான்
தன்னிலமை சோதிப்பான் றான்வேண்டிப்-பொன்னிகராம்
தன்னுருவம் நீங்கித் தனியே ஒருநாளில்
மன்னவன்பாற் சென்றான் மகிழ்ந்து. (284)

இவ்வகைத் தன்(ம) சரீரமெல்லாம் சொரி குருதியும், வழும்பு மாகிய நாய் இந்தத் தன்மபுத்திரனை அணுக வந்து வால் குழைத்து நின்று சுணங்குதான் யாது சொல்லிற்றோ வெனில்

சிரங்கனாய் வந்தவெனைத் தேர்வேந்தே என்னை
இரங்கியினி ஏறவிடாய் என்று—தரங்கம்
பரந்துபுனல் சூழ்நாட னத்திசேர் தி.......
இரங்கவுரை செய்ததே இங்கு. (285)

---

*குறைப்பாட்டு சுவடிப்படி எழுதப்பெற்றது.

என்பது, என இந்த ஆறு கடக்கின்றாயா (என்னைக்) கொண்டுபோவாயாகென்று வால் குழைத்துச்சேவைசெய்து தன்ம புத்திரன் இரங்கும்,......... து நிற்பமற்ற தன் சரீரமெல்லாம் புழுநெளியக் கண்டிரங்கி என்னே உனக்கிது வந்து ... ..தி நிற்பமாலியாறும் சிறிது வற்றினது கண்டு தன்மபுத்திரன் போகத் துணிதலும் சுணங்கனுமதுகண்டு வளையிட்டு நின்று யாது சொல்லிற்றோவெனில்,

*தலையும் புழுத்தென் சரீரமும்புண் ணெங்கு
மலைகின்(றேன்) [வே]ண்டின் –றலைபுனல்சேர்
ஆற்றங்கரை கடக்க அய்யாகொண் டேகென்று
சாற்றின் வெவ்........ ... (286)

என்பது, நானிந்த வடிவின்கண் சால நாள் திரிகின்றேன். இந்த மாலியாறு கடக்க மா[ட்டாமல்] ........ப்பாத்தும் போக விரகன்றி உழலுகின்றேன். நீ என் புண்ணிய [கிருத்தத்] தாலே வந்து தோன்றினாய் என,

வழுவு மொழுகும் சுரோணிதமும் மேனி
முகமெல்லாமிகுந் தூரத் தா—னேதும்
நெஞ்சில் நினையாதே நெடுமுடியின் மீதுவைத்தான்
பஞ்சவரில் மூத்தான் பரிந்து (287)

என்பது, இவ்வகை முடுவலைத் தலையில் வைத்து வழும்பும் சுரோணிதமும் தலையும் முகமும் வழிந்தொழுகத் தலையிலும் முகத்திலும் புழுவூர்தற்குச் சலியாதே போகலும், இப்படிப் போகின்ற தன்மபுத்திரனை நோக்கி யான் முன்பு செய்த பாவங்களாலே இப்படி அனுபவிக்கின்றேன் என்று முடுவல் யாது சால்லிற்றோ எனில்,

பாரை ஒளித்துரைப்பன் பாப்பாரைத் தீங்குசெய்வன்
ஊரை உறக்கத்தே தீயிடுவன்—ஏரி
கரையுடைப்பன் கூவல்குளம் காணிஎன்றுந் தூர்ப்பன்
உரையெடுத்துச் சொல்வதே உற்று. (288)

அன்றியும், பல மிருகங்கள், கொல்வன் பசுவை வதை செய்வன்,

---

* எங்கு மூ. பாடம்.

* குறைப்பாடல்

சீலமனிதர் சீவன் செகுப்பன் வலைபிணித்து
வான்பறவை கொல்வன் மரங்குறைப்பன்—மூத்தாரைத்
தான்பிறகு பேணேன் தலத்து. (289)

என்பது, மிருகங்களைக் கொல்வன் குராற் பசுவைக் கொல்வன் கொடிய பல குற்றங்கள் செய்வேன், மனுஷரைக் கொல்வேன் வலை பிணித்து பறவைகளைக் கொல்வேன் வாழை மரங்களைக் குறைப்பேன், குரவரைப் பேணேன், ஆதலால் மிகவும் பாவங்கள் செய்வேனென்று பின்னும் யாது சொல்லிற்றோ எனில்,

படுகுழிகள் கல்லிடுவன் பாவையுரை கொல்வன்
கொடியபல குற்ற மேற்கொள்வன்—இடுவதனை
இச்சி யே[ன்] ஆர்க்குமிசைவு கொண்டே(ன)
(னெஞ்ஞான்றும்
நச்சியர்க் கீயேன் நயந்து. (290)

இவ்வகை முடுவல் சொல்லக் கேட்டுத் தன்மபுத்திரன் சொல்லுவான்.

யாவராயினும் தான் செய்த பாவங்களைச் சொன்னால் பாவங்கள் நீங்குமென்று மகா இருடிகள் சொல்ல யான் கேட்டறிவன் ஆதலால் நீயும் செய்த பாவம் சொன்னாய் உனக்கு நரகமில்லை நானுமுன்னை நட்டாற்றில் இழிய விடுகிலேன், கரையேற்றிவிடுவே னென்று பின்னும் சொல்லுவான்

எல்லாக் கொலைசெய்தா யாகிலும் யானுன்னைப்
புல்லாக் கரையிற்போய் விடுவன்—சொல்லா
அதுபெரிதே சொன்னாயின் றாற்றில்விடே னென்றான்
மதிகுல......வெண்குடையான் † தான். (291)

*குராற்பசு – கபில நிறப்பசு. † மகிழ்ந்து மூ. பாடம்.

